# க.பொ.த (உ.தர)ப் பரீட்சை - 2012

# மதிப்பீட்டு அறிக்கை

# 33 - கணக்கீடு




**ஆய்வு அபிவிருத்திக் கிளை**
**தேசிய மதிப்பீட்டிற்கும் பரீட்சித்தலுக்குமான சேவை**
**இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்**

# அறிமுகம்

கல்விப் பொதுத் தராதரப் பத்திர உயர் தரப் பரீட்சையானது இலங்கையின் உயர்மட்ட இரண்டாம் நிலைக் கல்வியின் இறுதிச் சான்றிதழ்ப் பரீட்சையாகும். உயர்மட்ட இரண்டாம் நிலைக் கல்வியின் இறுதியில் மாணவர்களின் அடைவு மட்டத்தைச் சான்றுப்படுத்தல் இப் பரீட்சையின் முக்கிய நோக்காக இருந்த போதும் தேசிய பல்கலைக்கழகங்கள், வேறு கல்வி மற்றும் தொழில் பயிற்சி நிறுவனங்கள், தேசிய கல்வியியல் கல்லூரிகள் என்பவற்றுக்குத் தகைமையானோரைத் தெரிவு செய்தலும் இப்பரீட்சையின் பெறுபேறுகளின் அடிப்படையில் இடம்பெறுவதால் அடைவுப் பரீட்சையாகவும் தேர்வுப் பரீட்சையாகவும் க.பொ.த (உ.தர)ப் பரீட்சை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த தன்மையைப் பெறுகிறது. மேலும் மூன்றாம் நிலையில் தொழிலில் பிரவேசிப்பதற்கான தகைமையை சான்றுப்படுத்தும் பரீட்சையாகவும் இது ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. இப்போது இப்பரீட்சைக்காக 2012 ஆம் ஆண்டில் 196954 வரையிலான பாடசாலைப் பரீட்சார்த்திகளும் 10,954 வரையிலான தனிப்பட்ட பரீட்சார்த்திகளும் தோற்றியிருந்தனர்.

இப்பரீட்சையில் உயர் அடைவு மட்டத்தைப் பெறுவதற்காக மாணவர்களும் அவர்களின் எதிர்பார்ப்புகளை நிறைவு செய்வதற்காக ஆசிரியர்களும் பெற்றோரும் பெரிதும் முயற்சி செய்கின்றனர். இந்த மதிப்பீட்டு அறிக்கையை அவர்களின் அந்த எதிர்பார்ப்புக்களை நிறைவேற்றுவதற்கு உதவும் பொருட்டே இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் தயாரித்துள்ளது. இந்த மதிப்பீட்டு அறிக்கையில் உள்ளடக்கப்பட்ட தகவல்கள் பரீட்சையை எதிர்பார்த்திருப்போர், ஆசிர்யரிமார், அதிபர்மார், ஆசிரியர் ஆலோசகர்கள், பாடப் பொறுப்புக் கல்விப் பணிப்பாளர்கள் பெற்றோர், கல்வி ஆய்வாளர்கள் அனைவருக்கும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

இந்த மதிப்பீட்டு அறிக்கை I, II, III என மூன்று பகுதிகளைக் கொண்டுள்ளது.

க.பொ.த (உ.தர) கணக்கியல் பாடத்தின் நோக்கம் பாட அடைவு பற்றிய தகவல்கள் இந்த அறிக்கையின் பகுதி I இல் அடங்கியுள்ளது. இப்பகுதியில் பாடத்திற்கு தோற்றிய பரீட்சார்த்திகளின் எண்ணிக்கை, அவர்கள் தரங்களைப் பெற்றுள்ள விதம், மாவட்ட மட்டத்தில் பாடசாலைப் பரீட்சார்த்திகள் தரங்களைப் பெற்றுள்ள விதம் வகுப்பாயிடைக்கேற்ப புள்ளிகளின் பரம்பல் ஆகிய பாட அடைவு பற்றிய புள்ளிவிபரத் தகவல்களும் கணக்கியல் பாடத்தின் வினாப்பத்திரம் I, II என்பவற்றில் வினாக்கள் தெரிவு செய்யப்பட்ட விதம், அவ்வினாக்களுக்கும் அவ்வினாக்களின் பகுதிகளுக்கும் புள்ளிகள் பெற்றுள்ள விதம் என்பன பற்றி விரிவாகக் குறிப்பிடும் பாட அடைவு பற்றிய பகுப்பாய்வும் உள்ளடக்கப்பட்டுள்ளன. க.பொ.த (உ.தர)ம் - 2012 பரீட்சையில் கணக்கியல் பாடத்தின் வினாப்பத்திரம் I, II என்பவற்றுக்கான வினாக்கள் அவ்வினாக்களுக்கு பரீட்சார்த்திகள் விடைகள் அளித்திருந்தமை பற்றிய தகவல்கள் இந்த அறிக்கையின் பகுதி II இல் அடங்கியுள்ளன. அதில் வினாப்பத்திரம் I, II என்பவற்றின் வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகள், புள்ளி வழங்கும் திட்டம், விடைகள் அளித்தமை பற்றிய அவதானிப்புக்கள், முடிவுகள், பாட அடைவை மேம்படுத்துவதற்கான ஆலோசனைகள் என்பனவும் உள்ளடக்கப்பட்டுள்ளன.

இலங்கைப் பரீட்சைத் திணைக்களத்தின் ஆய்வு அபிவிருத்திக் கிளை மூலம் விடைத்தாள் மதிப்பீட்டில் ஈடுபட்ட பிரதம பரீட்சகர், மேலதிக பிரதம பரீட்சகர், உதவிப் பரீட்சகர்கள் ஆகியோரால் முன்வைக்கப்பட்ட தகவல்கள், அவதானிப்புகள், கருத்துகள், ஆலோசனைகள், மரபு ரீதியான சோதனைக் கோட்பாடு (Classical Testing Theory) மற்றும் உருப்படித் துலங்கள் கோட்பாடு (Item Response Theory) என்பவற்றைப் பயன்படுத்தி பரீட்சார்த்திகளின் துலங்கல்களைப் பகுப்பாய்வு செய்தலினூடாகப் பெறப்பட்ட தகவல்கள் என்பன இந்த மதிப்பீட்டு அறிக்கையை தயாரிப்பதற்கு ஆதாரமாகக் கொள்ளப்பட்டுள்ளன.

வினாப்பத்திரத்திலுள்ள ஒவ்வொரு வினாக்களுக்கும் விடையளிக்கும்போது பரீட்சார்த்திகள் கவனத்தில் கொள்ள வேண்டிய விடயங்கள், கற்றல் - கற்பித்தல் பணிகள் பற்றிய கருத்துகள், ஆலோசனைகள் என்பனவும் இந்த அறிக்கையில் பகுதி III இல் அடங்கியுள்ளன. பல்வேறு தேர்ச்சிகள் அத்தேர்ச்சி மட்டங்களை அணுகுவதற்கான கற்றல் - கற்பித்தல் செயன்முறையை ஒழுங்கமைக்கும் விதம் என்பன தொடர்பாக இந்த அறிக்கையானது பெரிதும் துணை புரியும் என நம்புகின்றேன்.

**எதிர்காலத்தில்** தொகுக்கப்படும் மதிப்பீட்டு அறிக்கைகளின் பண்புத்தரத்தை மேம்படுத்தக் கூடிய பயன்தரும் கருத்துகள், ஆலோசனைகள் என்பவற்றை எங்களுக்குச் சமர்ப்பிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த அறிக்கையைத் தயாரிப்பதற்குத் தேவையான தகவல்களை வழங்கிய பிரதம பரீட்சகர், மேலதிக பிரதம பரீட்சகர், உதவிப் பரீட்சகர்கள், ஊக்கத்துடன் பங்களிப்பு வழங்கிய குழு உறுப்பினர்கள், பொறுப்புடன் கடமையாற்றிய இலங்கைப் பரீட்சைத் திணைக்கள அலுவலர்கள், பணிக்குழுவினர் ஆகியோருக்கும் அழகுற அச்சிட்டு உதவிய அரச அச்சகக் கூட்டுத்தாபனத்துக்கும் இத்தொகுப்புக்கான நிதி அனுசரணை வழங்கி எதிர்கால அறிவை மையமாகக் கொண்டு பாடசாலைத் தொகுதியினை மீளமைக்கும் செயற்றிட்டத்துக்கும் (TSEP - WB) எனது மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கின்றேன்.

டபிள்யு.எம்.என்.ஜே. புஷ்பகுமார
பரீட்சை ஆணையாளர் நாயகம்.

2013 டிசம்பர் 01
ஆய்வு அபிவிருத்திக் கிளை,
தேசிய மதிப்பீட்டிற்கும் பரீட்சித்தலுக்குமான சேவை,
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்,
பெலவத்தை,
பத்தரமுல்ல.

| | | |
|---|---|---|
| வழிகாட்டல் | : | **டபிள்யு.எம்.என்.ஜே. புஷ்பகுமார**<br>பரீட்சை ஆணையாளர் நாயகம் |
| ஒழுங்கமைப்பும் நெறிப்படுத்தலும் | : | **திருமதி. கயாத்திரி அபேகுணசேகர**<br>பரீட்சை ஆணையாளர்<br>(ஆய்வு அபிவிருத்திக் கிளை) |
| இணைப்பு | : | **திரு. இசுரு உசான் வீரசிங்க**<br>உதவிப் பரீட்சை ஆணையாளர் |
| தொகுப்பு | : | **திருமதி. கயாத்திரி அபேகுணசேகர**<br>பரீட்சை ஆணையாளர்<br>(ஆய்வு அபிவிருத்திக் கிளை) |
| | : | **பேராசிரியர். டி. எஸ். என். பீ. சேனாரத்ன**<br>கற்கைதுறை தலைவர்<br>கணக்கியல் கற்கை பிரிவு<br>ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம் |
| | : | **திரு. டபிள்யு. ஹிலரி சில்வா**<br>சிரேஷ்ட விரிவுரையாளர்<br>கணக்கியல் கற்கை பிரிவு<br>ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம் |
| | : | **திரு. பீ. டி. சீ. உதய ஸாந்த**<br>விரிவுரையாளர்<br>கணக்கியல் கற்கை பிரிவு<br>ஸ்ரீ ஜயவர்தனபுர பல்கலைக்கழகம் |
| ஆக்கக் குழு | : | **திருமதி. டபிள்யு. எம். பிறேமனி பெர்னாந்து**<br>சாந்த பீட்டர்ஸ் வித்தியாலயம்<br>பம்பலபிட்டி |
| | : | **திரு. என் எம். கருணாதிலக**<br>சிலா/ தேசியப் பாடசாலை<br>சிலாபம் |
| | : | **திரு. ஐ. டி. பிரேமதிகல**<br>கா/ கரந்தெனிய ம.ம.வி<br>கரந்தெனிய |
| மொழிப்பெயர்ப்பு | : | **திரு. சி. எல். எம். நவாஸ்**<br>வலயக் கல்விப் பணிமனை<br>இப்பாகமுவ |
| கணினிப் பக்க வடிவமைப்பு | : | **திரு. பொ. அற்புதரூபன்**<br>முகாமைத்துவ உதவியாளர் |
| | : | **செல்வி. சுப்ரமணியம் காஞ்சனா**<br>கணினித் தரவுப் பதிவாளர் |

## உள்ளடக்கம்

பக்க எண்

## பகுதி I

## 1 பாடக் குறிக்கோள்களும் பாட அடைவு தொடர்பான தகவல்களும்

### 1.1 பாடக் குறிக்கோள்கள்

இப்பாடத்திட்டத்தினைப் பின்பற்றுவதனால் மாணவர்,

* கணக்கீட்டின் எண்ணக்கரு ரீதியான சட்டகம் தொடர்பிலான அடிப்படை விளக்கத்தினைப் பெற்றுக் கொள்வார்.
* கணக்கியல் நுட்ப முறைகள் தொடர்பில் பெற்ற அடிப்படை அறிவினைப் பயன்படுத்துவார்.
* கணக்கீட்டுப் பாடத்துறையில் வெளிப்படையாகக் காணப்படும் புத்தாக்கங்களை விளங்கிக் கொள்வார்.
* கணக்கீட்டுப் பாடத்துறையின் ஊடாகப் பெற்றுக் கொள்ளும் அறிவினை பல்வேறு தொழில் தேவைகளுக்குப் பயன்படுத்துவார்.
* சமூகப் பொருளாதார சூழலொன்றுக்கு வினைத்திறனாகச் செயற்படக் கூடிய முகாமைத்துவத் திறனைப் பெற்றுக்கொள்வார்.
* பல்வேறுபட்ட வணிக அமைப்புக்களின் கணக்கு வைப்பு தொடர்பிலான திறனைப் பெற்றுக் கொள்வார்.
* பாடத்துறையில் தேடியறிதல்களை மேற்கொள்வதன் மூலம் கிடைக்கும் அனுபவத்தினை எதிர்கால ஆய்வு அபிவிருத்திக் கருமங்களுக்கு பயன்படுத்திக் கொள்வார்.
* வளங்களை ஆக்கபூர்வமாகவும், வினைத்திறனாகவும் பயன்படுத்துவதற்கான தேர்ச்சியினை விருத்தி செய்து கொள்வார்.

## 1.2 பரீட்சார்த்திகளின் பாட அடைவு தொடர்பான புள்ளிவிபரத் தகவல்கள்

### 1.2.1 இப்பாடத்துக்குத் தோற்றிய பரீட்சார்த்திகளின் எண்ணிக்கை

| மொழிமூலம் | பாடசாலை | தனிப்பட்ட | மொத்தம் |
|---|---|---|---|
| சிங்களம் | 43497 | 1396 | 44893 |
| தமிழ் | 6649 | 370 | 7019 |
| ஆங்கிலம் | 1427 | 409 | 1836 |
| **மொத்தம்** | **51573** | **2175** | **53748** |

அட்டவணை 1

### 1.2.2 பரீட்சார்த்திகளினால் தரங்கள் பெறப்பட்டுள்ள விதம்

| தரம் | பாடசாலைப் பரீட்சார்த்திகள் | | தனிப்பட்ட பரீட்சார்த்திகள் | | மொத்தம் | சதவீதம் |
|---|---|---|---|---|---|---|
| | எண்ணிக்கை | சதவீதம் | எண்ணிக்கை | சதவீதம் | | |
| A | 11164 | 21.65 | 171 | 7.86 | 11335 | 21.09 |
| B | 6127 | 11.88 | 134 | 6.16 | 6261 | 11.65 |
| C | 10499 | 20.36 | 295 | 13.56 | 10794 | 20.08 |
| S | 11947 | 23.17 | 486 | 22.35 | 12433 | 23.13 |
| F | 11836 | 22.94 | 1089 | 50.07 | 12925 | 24.05 |
| மொத்தம் | **51573** | **100.00** | **2175** | **100.00** | **53748** | **100.00** |

அட்டவணை 2

## 1.2.3 மாவட்ட அடிப்படையில் முதல் முறையாகத் தோற்றிய பரீட்சார்த்திகள் தரங்கள் பெற்றுள்ள விதம்

| மாவட்டம் | தோற்றியோரின் எண்ணிக்கை | அதி சிறந்த சித்தி (A) பெற்றோர் | | விசேட திறமைச் சித்தி (B) பெற்றோர் | | திறமைச் சித்தி (C) பெற்றோர் | | சாதாரண சித்தி (S) பெற்றோர் | | சித்தி (A+B+C+S) பெற்றோர் | | சித்தி அடையாதோர் (F) | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % | எண்ணிக்கை | % |
| 1. கொழும்பு | 7825 | 1877 | 23.99 | 856 | 10.94 | 1630 | 20.83 | 1788 | 22.85 | 6151 | 78.61 | 1674 | 21.39 |
| 2. கம்பஹா | 4814 | 960 | 19.94 | 502 | 10.43 | 859 | 17.84 | 1121 | 23.29 | 3442 | 71.50 | 1372 | 28.50 |
| 3. களுத்துறை | 2200 | 527 | 23.95 | 283 | 12.86 | 451 | 20.50 | 501 | 22.77 | 1762 | 80.09 | 438 | 19.91 |
| 4. கண்டி | 2575 | 478 | 18.56 | 279 | 10.83 | 491 | 19.07 | 682 | 26.49 | 1930 | 74.95 | 645 | 25.05 |
| 5. மாத்தளை | 687 | 83 | 12.08 | 72 | 10.48 | 140 | 20.38 | 172 | 25.04 | 467 | 67.98 | 220 | 32.02 |
| 6. நுவரெலியா | 880 | 112 | 12.73 | 89 | 10.11 | 170 | 19.32 | 240 | 27.27 | 611 | 69.43 | 269 | 30.57 |
| 7. காலி | 2160 | 601 | 27.82 | 252 | 11.67 | 380 | 17.59 | 440 | 20.37 | 1673 | 77.45 | 487 | 22.55 |
| 8. மாத்தறை | 1380 | 335 | 24.28 | 179 | 12.97 | 263 | 19.06 | 282 | 20.43 | 1059 | 76.74 | 321 | 23.26 |
| 9. அம்பாந்தோட்டை | 895 | 149 | 16.65 | 119 | 13.30 | 208 | 23.24 | 199 | 22.23 | 675 | 75.42 | 220 | 24.58 |
| 10. யாழ்ப்பாணம் | 813 | 154 | 18.94 | 92 | 11.32 | 162 | 19.93 | 194 | 23.86 | 602 | 74.05 | 211 | 25.95 |
| 11. கிளிநொச்சி | 105 | 20 | 19.05 | 12 | 11.43 | 25 | 23.81 | 28 | 26.67 | 85 | 80.95 | 20 | 19.05 |
| 12. மன்னார் | 171 | 25 | 14.62 | 18 | 10.53 | 39 | 22.81 | 38 | 22.22 | 120 | 70.18 | 51 | 29.82 |
| 13. வவுனியா | 234 | 78 | 33.33 | 30 | 12.82 | 50 | 21.37 | 43 | 18.38 | 201 | 85.90 | 33 | 14.10 |
| 14. முல்லைத்தீவு | 79 | 10 | 12.66 | 6 | 7.59 | 21 | 26.58 | 19 | 24.05 | 56 | 70.89 | 23 | 29.11 |
| 15. மட்டக்களப்பு | 545 | 159 | 29.17 | 58 | 10.64 | 102 | 18.72 | 119 | 21.83 | 438 | 80.37 | 107 | 19.63 |
| 16. அம்பாறை | 833 | 130 | 15.61 | 98 | 11.76 | 167 | 20.05 | 219 | 26.29 | 614 | 73.71 | 219 | 26.29 |
| 17. திருகோணமலை | 443 | 76 | 17.16 | 49 | 11.06 | 76 | 17.16 | 117 | 26.41 | 318 | 71.78 | 125 | 28.22 |
| 18. குருநாகல் | 2240 | 433 | 19.33 | 256 | 11.43 | 448 | 20.00 | 478 | 21.34 | 1615 | 72.10 | 625 | 27.90 |
| 19. புத்தளம் | 1074 | 215 | 20.02 | 129 | 12.01 | 214 | 19.93 | 255 | 23.74 | 813 | 75.70 | 261 | 24.30 |
| 20. அனுராதபுரம் | 1174 | 171 | 14.57 | 142 | 12.10 | 264 | 22.49 | 309 | 26.32 | 886 | 75.47 | 288 | 24.53 |
| 21. பொலன்னறுவை | 544 | 85 | 15.63 | 62 | 11.40 | 90 | 16.54 | 129 | 23.71 | 366 | 67.28 | 178 | 32.72 |
| 22. பதுளை | 1264 | 212 | 16.77 | 121 | 9.57 | 218 | 17.25 | 295 | 23.34 | 846 | 66.93 | 418 | 33.07 |
| 23. மொனராகலை | 508 | 84 | 16.54 | 65 | 12.80 | 112 | 22.05 | 128 | 25.20 | 389 | 76.57 | 119 | 23.43 |
| 24. இரத்தினபுரி | 1707 | 466 | 27.30 | 222 | 13.01 | 336 | 19.68 | 354 | 20.74 | 1378 | 80.73 | 329 | 19.27 |
| 25. கேகாலை | 1221 | 259 | 21.21 | 127 | 10.40 | 261 | 21.38 | 262 | 21.46 | 909 | 74.45 | 312 | 25.55 |
| **நாடு முழுவதும்** | **36371** | **7699** | **21.17** | **4118** | **11.32** | **7177** | **19.73** | **8412** | **23.13** | **27238** | **74.89** | **9133** | **25.11** |

**அட்டவணை** 3

### 1.2.5 வகுப்பாயிடை அடிப்படையில் புள்ளிகள் பெறப்பட்டுள்ள விதம்

| வகுப்பாயிடை | மீடிறன் | மீடிறன் சதவீதம் | திரள் மீடிறன் | திரள் மீடிறன் சதவீதம் |
|---|---|---|---|---|
| 91 - 100 | 1664 | 3.10 | 53748 | 100.00 |
| 81 - 90 | 5332 | 9.92 | 52084 | 96.90 |
| 71 - 80 | 6206 | 11.55 | 46752 | 86.98 |
| 61 - 70 | 6681 | 12.43 | 40546 | 75.44 |
| 51 - 60 | 7501 | 13.96 | 33865 | 63.01 |
| 41 - 50 | 8248 | 15.35 | 26364 | 49.05 |
| 31 - 40 | 7778 | 14.47 | 18116 | 33.71 |
| 21 - 30 | 6242 | 11.61 | 10338 | 19.23 |
| 11 - 20 | 3467 | 6.45 | 4096 | 7.62 |
| 01 - 10 | 619 | 1.15 | 629 | 1.17 |
| 00 - 00 | 10 | 0.02 | 10 | 0.02 |

**அட்டவணை 4**

மேலே தரப்பட்டுள்ள அட்டவணையிலிருந்து தகவல்களைப் பெற்றுக்கொள்ளும் முறை கீழே தரப்பட்டுள்ள உதாரணத்தின் மூலம் காட்டப்பட்டுள்ளது.

உதாரணம் :

இப்பாடத்திற்கு தோற்றிய 53748 பேரில் 31 - 40 வகுப்பாயிடையினுள் புள்ளிகள் பெற்றோர் எண்ணிக்கை 7778 ஆகும். சதவீத அடிப்படையில் அது 14.47% ஆகும். 40 புள்ளிகள் அல்லது அதனிலும் குறைந்த புள்ளிகள் பெற்றோர் எண்ணிக்கை 18116 என்பதுடன் அதன் சதவீதம் 33.71% ஆகும்.

### 1.3 பாட அடைவு பற்றிய பகுப்பாய்வு

#### 1.3.1 வினாப்பத்திரம் I இன் அடைவு




**வரைபு** 1 (RD/16/05/AL படிவத்திலிருந்து பெற்ற தகவல்களின் அடிப்படையில் தயாரிக்கப்பட்டது.)

மேலே தரப்பட்டுள்ள வரைபிலிருந்து தகவல்களைப் பெற்றுக் கொள்ளும் முறை பின்வரும் உதாரணம் மூலம் விளக்கப்படுகிறது.

உதாரணம் : இங்கு கூடுதலான பரீட்சார்த்திகள் 1 ஆம் வினாவிற்கே சரியாக விடையளித்துள்ளதுள்ளனர். அதன் சதவீதம் 89% ஆகும், அத்தோடு குறைந்தளவு எண்ணிக்கையான பரீட்சார்த்திகள் சரியாக விடையளித்துள்ளது 33 ஆம் வினாவிற்காகும். அதன் சதவீதம் 18% ஆகும்.

### 1.3.2 வினாப்பத்திரம் II - இல் வினாக்கள் தெரிவு செய்யப்பட்டுள்ள விதம்




இவ்வரைபிலிருந்து தகவல்கள் பெறும் முறை பின்வரும் உதாரணம் மூலம் காட்டப்படுள்ளது.

உ- ம் : இங்கு **1** ஆம், **2** ஆம் வினாக்கள் கட்டாய வினாவாக இருந்த போதும் சிறு தொகையினர் இவ்வினாவிற்கு விடையளிக்கவில்லை. பரீட்சார்த்திகளில் கூடுதல் எண்ணிக்கையானோர் விடையளித்திருந்தது வினாப்பத்திரம் **II** இன் **1**ஆம் வினாவிற்கேயாகும். அதன் சதவீதும் **97%** ஆகும். தெரிவு செய்துள்ள வினாக்களில் (3 - 7 வரை) குறைவாகத் தெரிவுசெய்துள்ளது 5 ஆவது வினாவினையே ஆகும். இது 62% ஆகும்.

**வரைபு 2** - (RD/16/02/AL படிவத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது.)

### 1.3.3 வினாப்பத்திரம் II இல் புள்ளிகள் பெற்றுள்ள விதம்




இவ் வரைபிலிருந்து தகவல்கள் பெறும் முறையானது பின்வரும் உதாரணம் மூலம் காட்டப்பட்டுள்ளது.

உ-ம் : இங்கு 1 ஆம் வினாவுக்காக ஒதுக்கப்பட்டுள்ள புள்ளிகள் 20 ஆகும். அப்புள்ளிகளுள் 76% - 100% வகுப்பாயிடையில் அதாவது 18 % ஆனோர் 16-20 இற்கு இடைப்பட்டப் புள்ளிகளைப் பெற்றுள்ளனர். அவ்வாறே ஒதுக்கப்பட்டுள்ள 20 புள்ளிகளுள் 0%-25% வரையான புள்ளிகளைப் பெற்றோர் 30% ஆனோராகும்.

**வரைபு 3** - (RD/16/02/AL படிவத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது.)

## 1.3.4 வினாப்பத்திரம் II இன் அடைவு




வரைபு 4 (RD/16/04/AL படிவத்தை அடிப்படையாகக் கொண்டு தயாரிக்கப்பட்டது.)

மேலே தரப்பட்ட வரைபிலிருந்து தகவல்களைப் பெற்றுக் கொள்ளும் முறை கீழே தரப்பட்டுள்ளது.

உதாரணம் : 2 ஆம் வினாவின் அ (2) ஆம் பகுதியின் இலகத்தன்மை 66% ஆகக் காணப்படுவதோடு, 3 ஆம் வினாவின் அ (1) ஆம் பகுதியின் இலகத்தன்மை 93% ஆகும்.

# பகுதி II

## 2 வினாக்களும் அவற்றிற்கு விடையளிக்கப்பட்டமை தொடர்பான விபரங்களும்

### 2.1 வினாப்பத்திரம் I உம் அதற்கு விடையளிக்கப்பட்டுள்ளமை தொடர்பான விபரங்களும்

#### 2.1.1 வினாப்பத்திரம் I இன் கட்டமைப்பு

* நேரம் 02 மணித்தியாலங்களாகும்.
* 30 பல்தேர்வு வினாக்களும், சுருக்க விடையளித்தல் வினாக்கள் 20 உம் காணப்படுகின்றன.
* சகல வினாக்களுக்கும் விடையளித்தல் வேண்டும்.
* ஒரு வினாவிற்கு 02 புள்ளிகள் வீதம் மொத்தப் புள்ளிகள் 100 ஆகும்.
* விடைத்தாள் மதிப்பீட்டின் போது ஒவ்வொரு வினாவிற்கும் 4 புள்ளிகள் வீதம் வழங்கப்படும். அதற்கேற்ப மொத்தப்புள்ளிகள் 200 ஆகும்.
* பக்கம் 25 இல் இறுதிப் புள்ளி மதிப்பிடும் விதம் தொடர்பாக காட்டப்பட்டுள்ளது.

## 2.1.2 வினாப்பத்திரம் I இன் வினா இல. 1 - 30 வரையான வினாக்கள்

1. கணக்கீட்டின் பிரதான குறிக்கோள்
   (1) நிறுவனம் ஒன்றின் எல்லாக் கொடுக்கல் வாங்கல்களையும் கணக்குப் புத்தகங்களில் பதிதல்.
   (2) நிறுவனம் ஒன்றின் கொடுக்கல் வாங்கல்களைப் பதிதல், வகைப்படுத்தல், சுருக்குதல் ஆகியன.
   (3) நிறுவனம் ஒன்றின் நிதிக்கூற்றுக்களில் காணப்படும் தகவல்களைப் பகுப்பாய்வு செய்தல்.
   (4) முகாமையாளர்களுக்கு நிறுவனம் ஒன்றின் கொடுக்கல் வாங்கல்களின் விபரமான பகுப்பாய்வினை வழங்குதல்.
   (5) நிறுவனம் பற்றிய தகவல்களை அதனைப் பயன்படுத்துவோரின் தீர்மானம் மேற்கொள்ளலுக்காக வழங்குதல். (.........)

2. நிறுவனம் ஒன்றின் கொள்வனவு நாளேட்டில் பின்வரும் கொடுக்கல்வாங்கல்களில் எது பதியப்படும் ?
   (1) கடனுக்குக் கொள்வனவு செய்யப்பட்ட எல்லாச் சொத்துக்களும்
   (2) மீள் விற்பனை செய்யும் நோக்கத்துடன் மேற்கொள்ளப்பட்ட எல்லாக் கொள்வனவுகளும்
   (3) மீள் விற்பனை செய்யும் நோக்கத்துடன் மேற்கொள்ளப்பட்ட எல்லாக் கடன் கொள்வனவுகளும்
   (4) கடனுக்கு மீள் விற்பனை செய்யும் நோக்கத்துடன் மேற்கொள்ளப்பட்ட எல்லாக் கொள்வனவுகளும்
   (5) கடனுக்கு கொள்வனவு செய்யப்பட்ட எல்லா ஆதனம், இயந்திரம் மற்றும் உபகரணங்கள் (.........)

3. நிறுவனம் ஒன்று ரூபா 500 000 பெறுமதியான பொருட்களைக் கடனுக்கு விற்பனை செய்தது. இவைகளுள் ரூபா 50 000 பெறுமதியான பொருட்களை அவை குறித்த விபரங்களுக்கு அமையாமையினால் வாடிக்கையாளர்கள் திருப்பி அனுப்பினர். பின்னர் வாடிக்கையாளர்கள் மிகுதித் தொகையைத் தீர்ப்பதற்கு பணம் செலுத்தினர். இக் கொடுக்கல் வாங்கல்களைப் பதிவதற்குத் தேவையான மூல ஆவணங்களின் வரிசைமுறை பின்வருவனவற்றுள் எது ?
   (1) விலைப்பட்டியல், வரவுத்தாள், கொடுப்பனவு உறுதிச்சீட்டு
   (2) விலைப்பட்டியல், செலவுத்தாள், கொடுப்பனவு உறுதிச்சீட்டு
   (3) விலைப்பட்டியல், நாட்குறிப்பிற்கான உறுதிச்சீட்டு, பற்றுச்சீட்டு
   (4) விலைப்பட்டியல், வரவுத்தாள், பற்றுச்சீட்டு
   (5) விலைப்பட்டியல், செலவுத்தாள், பற்றுச்சீட்டு (.........)

4. கணக்கீட்டுச் செயன்முறையில் காணப்படும் பின்வரும் நடவடிக்கைகளின் சரியான **ஒழுங்குவரிசை** யாது ?
   A - மூலப் பதிவேடுகளில் பதிதல்
   B - மூல ஆவணங்கள் தயாரிக்கப்படல்
   C - வியாபாரக் கொடுக்கல் வாங்கல்கள் இடம்பெறுதல்
   D - பரீட்சை மீதி தயாரிக்கப்படல்
   E - பேரேட்டில் பதிவுகளைப் பதிதல்
   (1) B, D, C, A, E (2) C, B, A, E, D (3) C, B, A, D, E
   (4) C, A, B, E, D (5) D, B, C, A, E (.........)

5. நிதிக்கூற்றுக்களைத் தயாரித்தல் மற்றும் சமர்ப்பித்தல் சட்டகத்திற்கமைய நிதிக்கூற்றுக்களின் **இரண்டு** அடிப்படை எடுகோள்கள் எவை ?
   (1) அலகுசார், அட்டுறு (2) அலகுசார், தொடர்ந்து இயங்குதல்
   (3) அலகுசார், கால அளவீடு (4) அட்டுறு, தொடர்ந்து இயங்குதல்
   (5) கால அளவீடு, பண அளவீடு (.........)

6. விற்பனைக் கிரயத்தை ஒரு செலவினமாகவும் வருட முடிவிலுள்ள சரக்கிருப்பைச் சொத்தொன்றாகவும் மிகச் சிறப்பாக இனம்காணப் பயன்படுத்தப்படும் எண்ணக்கரு பின்வருவனவற்றுள் எது ?
   (1) தொடர்ந்து இயங்குதல் (2) வரலாற்றுக் கிரயம் (3) இணைதல்
   (4) முன்னெச்சரிக்கை (5) தேறல் (.........)

7. கம்பனி ஒன்று 10 வருடங்களுக்கு முன்பு நிலமொன்றை வாங்கியது. இன்றுள்ள இதன் நியாயவிலையானது கொள்விலையின் 5 மடங்கு பெறுமதி கொண்டதாகும். நிலமானது நியாயவிலையில் மீள் மதிப்பீடு செய்யப்படுமாயின் இவ்வாறு செய்வதினை பின்வருவனவற்றுள் எக் கணக்கீட்டுத் தகவல்களின் பண்புசார் சிறப்பியல்பு பிரதிபலிக்கும் ?
   (1) ஒப்பீட்டுத் தன்மை (2) பொருத்தப்பாடு
   (3) நம்பகத் தன்மை (4) தோற்றத்திலும் பார்க்க கருத்து முக்கியத்துவம்
   (5) விளங்கிக்கொள்ளும் தன்மை (.........)

8. நிறுவனமொன்று குறிப்பிட்ட மாதமொன்றில் இயந்திரமொன்றைப் பராமரிப்பதற்காக ரூபா 8 000 செலுத்தியது. இக் கொடுக்கல் வாங்கலின் தாக்கமானது கணக்கீட்டுச் சமன்பாட்டில் பின்வருவனவற்றுள் எவ்வாறு காட்டப்படும் ?
   (1) சொத்துக்களில் ரூபா 8 000 குறைவு, பொறுப்புக்களில் ரூபா 8 000 குறைவு
   (2) சொத்துக்களில் ரூபா 8 000 குறைவு, பொறுப்புக்களில் ரூபா 8 000 அதிகரிப்பு
   (3) சொத்துக்களில் ரூபா 8 000 குறைவு, உரிமையாண்மையில் ரூபா 8 000 குறைவு
   (4) சொத்துக்களில் ரூபா 8 000 குறைவு, உரிமையாண்மையில் ரூபா 8 000 அதிகரிப்பு
   (5) சொத்துக்களில் ரூபா 8 000 குறைவு, சொத்துக்களில் ரூபா 8 000 அதிகரிப்பு (.........)

9. தனிவியாபாரி ஒருவரின் மூலதனக் கணக்கு மீதியானது குறிப்பிட்ட வருடமொன்றில் ரூபா 500 000 இனால் அதிகரித்துள்ளது. பின்வருவனவற்றுள் எக்கொடுக்கல் வாங்கல் இவ் அதிகரிப்பைப் **பிரதிபலிக்க மாட்டாது** ?
   (1) வியாபாரம் ரூபா 500 000 இலாபத்தை ஈட்டியுள்ளது.
   (2) உரிமையாளர் ரூபா 500 000 இனை புதிய மூலதனமாக இட்டுள்ளார்.
   (3) உரிமையாளர் வியாபாரப் பாவனைக்காக ரூபா 500 000 பெறுமதியான தனது மோட்டார் வாகனத்தை வியாபாரத்திற்குக் கொண்டு வந்துள்ளார்.
   (4) உரிமையாளர் தனது தனிப்பட்ட கடனுக்காக ரூபா 500 000 இனை நிறுவன வங்கிக் கணக்கிலிருந்து செலுத்தினார்.
   (5) உரிமையாளர் வியாபார விநியோகஸ்தருக்குச் செலுத்த வேண்டிய ரூபா 500 000 இனைத் தனது சொந்த வங்கிக் கணக்கிலிருந்து செலுத்தினார். (.........)

10. நிறுவனமொன்று எல்லாக் காசுக் கொடுக்கல் வாங்கல்களையும் வங்கிக் கணக்கினூடாக மேற்கொள்கிறது. இதன் மாதாந்த வங்கிக்கூற்று 31.01.2012 இல் ரூபா 270 000 செலவு மீதியைக் காட்டியது. இத்தினத்தில் வைப்புச் செய்யப்பட்டதும் ஆனால் வங்கியால் வசூலிக்கப்படாததுமான காசோலைகள் மற்றும் வழங்கப்பட்டதும் ஆனால் வங்கியில் சமர்பிக்கப்படாததுமான காசோலைகள் முறையே ரூபா 85 000, ரூபா 45 000 ஆகும். 31.01.2012 இல் புத்தகத்திலுள்ள வங்கி மீதி (வரவு) :

(1) ரூபா 225 000. (2) ரூபா 230 000. (3) ரூபா 270 000.
(4) ரூபா 310 000. (5) ரூபா 355 000. (………)

11. வியாபாரமொன்றின் வரைபு நிதிக்கூற்றுக்களைத் தயாரித்ததன் பின்பு பின்வரும் வழுக்கள் கண்டுபிடிக்கப்பட்டன.
(i) கடன்பட்டோரிடமிருந்து பெறப்பட்ட காசு ரூபா 18 500 ஆனது கடன்பட்டோர் கணக்கில் ரூபா 15 800 ஆகப் பதியப்பட்டுள்ளது.
(ii) கடன்விற்பனை ரூபா 25 000 ஆனது விற்பனைக் கணக்கில் ரூபா 2 500 என செலவு வைக்கப்பட்டுள்ளது.
(iii) விற்பனைத் திரும்பல் ரூபா 3 000 ஆனது விற்பனைக் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது.
இவ்வழுக்கள் காரணமாக நிறுவனத்தின் இலாபம் எவ்வளவு தொகையால் குறைத்துக் காட்டப்பட்டுள்ளது ?

(1) ரூபா 18 500. (2) ரூபா 22 500. (3) ரூபா 25 200.
(4) ரூபா 25 500. (5) ரூபா 28 200. (………)

12. கம்பனியானது 31.03.2012 இல் சரக்கிருப்புக்களின் மூன்று உருப்படிகள் தொடர்பாகப் பின்வரும் தகவல்களை வழங்கியது.

| உருப்படி | உற்பத்திக் கிரயம் (ரூபா) | எதிர்பார்க்கப்படும் விற்பனை (ரூபா) | எதிர்பார்க்கப்படும் விற்பனைச் செலவுகள் (ரூபா) |
|---|---|---|---|
| A | 13 000 | 15 000 | 5 000 |
| B | 10 000 | 16 000 | 4 000 |
| C | 17 000 | 19 000 | 7 000 |

'உருப்படி' அடிப்படையில் 31.03.2012 இல் சரக்கிருப்புகளின் பெறுமதி என்ன ?

(1) ரூபா 32 000. (2) ரூபா 34 000. (3) ரூபா 40 000.
(4) ரூபா 42 000. (5) ரூபா 50 000. (………)

- **நிறுவனம் ஒன்று தொடர்பான பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 13 ஆம், 14 ஆம் வினாக்களுக்கு விடையளிக்குக.**

(i) சம்பளங்கள்:

| | ரூபா |
|---|---|
| 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் செலுத்தியது | 44 000 |
| செலுத்தப்பட வேண்டியது - 31.03.2011 இல் | 4 000 |
| - 31.03.2012 இல் | 24 000 |

(ii) வாடகை வருமானம்:
01.10.2011 இல் வாடகைக்கு விடப்பட்ட கட்டிடமொன்றிலிருந்து 30.06.2012 இல் முடிவடையும் 9 மாதங்களுக்காக ரூபா 90 000 வாடகை பெறப்பட்டது.

13. 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்திற்கான வருமானக்கூற்றில் பதியப்படவேண்டிய சம்பளங்கள், வாடகை வருமானம் பின்வருவனவற்றுள் எது ?

| | சம்பளங்கள் (ரூபா) | வாடகை வருமானம் (ரூபா) |
|---|---|---|
| (1) | 24 000. | 30 000. |
| (2) | 28 000. | 30 000. |
| (3) | 44 000. | 60 000. |
| (4) | 64 000. | 60 000. |
| (5) | 64 000. | 90 000. |

(………)

14. 31.03.2012 இல் உள்ளவாறான ஐந்தொகையில் மேற்கூறியவை தொடர்பில் இனங்காணப்படவேண்டிய மொத்தப் பொறுப்புக்கள் எவ்வளவு ?

(1) ரூபா 20 000. (2) ரூபா 24 000. (3) ரூபா 30 000.
(4) ரூபா 54 000. (5) ரூபா 60 000. (………)

- **பின்வரும் தகவல்களைப் பயன்படுத்தி 15 ஆம், 16 ஆம் வினாக்களுக்கு விடையளிக்குக.**

01.04.2011 இல் அமிலன், கபிலன் ஆகிய இருவரும் பின்வரும் விதிமுறைகளை ஏற்றுக்கொண்டு பங்குடைமையை ஆரம்பித்தனர்.
(அ) ஒவ்வொரு பங்காளரும் வருடாந்த சம்பளமாக ரூபா 100 000 பெற உரித்துடையவர்.
(ஆ) பங்காளர்கள் தமது மூலதனக் கணக்கு மீதிகளுக்கு 10% வட்டி பெற உரித்துடையவர்.
(இ) இலாப நட்டங்கள் முறையே 3:2 எனும் விகிதத்தில் பகிர்வு செய்தல்.
அமிலனும் கபிலனும் முறையே ரூபா 400 000, ரூபா 200 000 காசை மூலதனமாகக் கொடுத்துள்ளனர்.
31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் பங்குடைமை ஆனது ரூபா 360 000 தேறிய இலாபம் ஈட்டியுள்ளது.

15. 31.03.2012 இல் உள்ளவாறான அமிலன், கபிலன் ஆகியோரின் நடைமுறைக் கணக்கு மீதிகள் எவ்வளவு ?

| | அமிலன் (ரூபா) | கபிலன் (ரூபா) |
|---|---|---|
| (1) | 140 000. | 120 000. |
| (2) | 160 000. | 140 000. |
| (3) | 200 000. | 160 000. |
| (4) | 216 000. | 144 000. |
| (5) | 600 000. | 360 000. |

(………)

16. இவ்வருடத்தில் அமிலன், கபிலன் ஆகிய ஒவ்வொருவரும் ரூபா 50 000 பற்றுதல்களைச் செய்திருப்பார்களாயின் 31.03.2012 இல் பங்குடைமையின் உரிமையாண்மை எவ்வளவாக இருக்கும் ?

(1) ரூபா 260 000. (2) ரூபா 500 000. (3) ரூபா 600 000.
(4) ரூபா 660 000. (5) ரூபா 860 000. (………)

17. பங்குடைமையொன்றினை அமல், விமல், சலீம் ஆகிய மூவரும் இலாப நட்டங்களை 2:2:1 எனும் விகிதத்தில் பகிர்ந்து நடாத்தினர். 31.03.2012 இல் சலீம் பங்குடைமையிலிருந்து விலகினார். அமலும் விமலும் இலாப நட்டங்களை 3:2 எனும் விகிதத்தில் பகிர்ந்து பங்குடைமையைத் தொடர்ந்து நடாத்தத் தீர்மானித்தனர். இத்தினத்தில் பங்குடைமையின் நன்மதிப்பு ரூபா 400 000 ஆக மதிப்பிடப்பட்டுள்ளதுடன் இது பங்காளர் மூலதனக் கணக்கினூடாகச் சீராக்கம் செய்யப்பட்டுள்ளது. 31.03.2012 இல் அமல், விமல் ஆகியோர்களது மூலதனக் கணக்குகளில் இந்த நன்மதிப்புச் சீராக்கத்தின் விளைவாக ஏற்பட்ட தேறிய தாக்கம் எவ்வளவு ?

| | அமல் | விமல் |
|---|---|---|
| (1) | தாக்கம் இல்லை. | தாக்கம் இல்லை. |
| (2) | ரூபா 80 000 குறைவு. | தாக்கம் இல்லை. |
| (3) | தாக்கம் இல்லை. | ரூபா 80 000 குறைவு. |
| (4) | ரூபா 160 000 அதிகரிப்பு. | ரூபா 160 000 அதிகரிப்பு. |
| (5) | ரூபா 240 000 குறைவு. | ரூபா 160 000 குறைவு. |

(.........)

18. வரையறுக்கப்பட்ட பாலா பொதுக்கம்பனி 500 000 சாதாரண பங்குகளை வழங்கியிருந்தது. 01.04.2011 இல் கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனக் கணக்கு ரூபா 10 000 000 மீதியாகக் காட்டியது. கம்பனியானது 01.07.2011 இல் காணப்படும் ஒவ்வொரு **5** பங்குகளுக்கு **1** பங்கு என்ற அடிப்படையில் பங்கொன்று ரூபா 20 விலையில் வழங்கி நிறுத்தி வைத்த வருவாய்களை மூலதனமாக்கியது. மேலும் 01.01.2012 இல் காணப்படும் ஒவ்வொரு **6** பங்குகளுக்கு **1** பங்கு என்ற அடிப்படையில் பங்கொன்று ரூபா 15 விலையில் உரிமை வழங்கல் செய்தது. எல்லாப் பங்குதாரர்களும் தமது உரிமைகளைப் பயன்படுத்தியுள்ளனர். இக்கொடுக்கல் வாங்கல் காரணமாக 31.03.2012 இல் உள்ளவாறான கம்பனியின் உரிமையாண்மையில் ஏற்பட்ட அதிகரிப்பு / குறைவு யாது ?

(1) ரூபா 2 000 000 குறைவு. (2) ரூபா 500 000 குறைவு. (3) ரூபா 1 500 000 அதிகரிப்பு.
(4) ரூபா 2 000 000 அதிகரிப்பு. (5) ரூபா 3 500 000 அதிகரிப்பு. (.........)

19. பின்வரும் விகிதங்களில் எவை முறையே நிறுவனமொன்றின் **நிதி உறுதித் தன்மை** (stability), **திரவத்தன்மை** ஆகியவற்றை மதிப்பீடு செய்வதற்கு முறையே பயன்படுத்தப்படும் ?

(1) கடன் – உரிமையாண்மை விகிதமும் நடைமுறை விகிதமும்
(2) விரைவு விகிதமும் கடன்பட்டோர் புரள்வு விகிதமும்
(3) வட்டிக்காப்பு விகிதமும் மொத்த சொத்துப் புரள்வு விகிதமும்
(4) மொத்த சொத்து மீதான வருவாய் விகிதமும் நடைமுறை விகிதமும்
(5) கடன் விகிதமும் மொத்த சொத்துப் புரள்வு விகிதமும் (.........)

20. கடன்பட்டோரில் ஒருவர் தனது மீதியைத் தீர்க்கும்போது கம்பனியொன்றின் நடைமுறை விகிதம், விரைவு விகிதம் ஆகியவைகளில் ஏற்படும் தாக்கம் என்ன ?

| | நடைமுறை விகிதம் | விரைவு விகிதம் |
|---|---|---|
| (1) | குறைவு | குறைவு |
| (2) | அதிகரிப்பு | அதிகரிப்பு |
| (3) | அதிகரிப்பு | குறைவு |
| (4) | குறைவு | அதிகரிப்பு |
| (5) | மாற்றமில்லை | மாற்றமில்லை |

(.........)

21. 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்திற்கான கம்பனியொன்றின் பின்வரும் தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| | ரூபா |
|---|---|
| கடன் விற்பனைகள் | 780 000 |
| கடன்பட்டோருக்கு அனுமதித்த கழிவுகள் | 65 000 |
| பதிவழிக்கப்பட்ட அறிவிடமுடியாக்கடன்கள் | 20 000 |
| விற்பனைத் திரும்பல்கள் | 35 000 |
| குறிப்பிட்ட வருடத்தில் கடன்பட்டோர் மீதியில் ஏற்பட்ட குறைவு | 80 000 |

31.03.2012 இல் முடிவடைந்த வருடத்திற்கான கடன்பட்டோரிடமிருந்து பெறப்பட்ட காசு எவ்வளவு ?

(1) ரூபா 580 000. (2) ரூபா 660 000. (3) ரூபா 695 000.
(4) ரூபா 715 000. (5) ரூபா 740 000. (.........)

22. பின்வருவனவற்றில் எவை நிறுவனமொன்றில் நிகழத்தக்க பொறுப்புக்களாக வெளிப்படுத்த முடியும் ?

A - நிதி நிறுவனமொன்றிடமிருந்து பெற்ற கடன்
B - நிறுவனத்திற்கு எதிரான தீர்க்கப்படாத வழக்கு
C - இன்னொரு நிறுவனத்தினால் பெறப்பட்ட கடன் ஒன்றிற்கு ஓர் உத்தரவாளராகச் செயற்படுவதற்கான உடன்படிக்கையொன்று
D - வங்கிக் கணக்கொன்றின் மேலதிகப்பற்று மீதி

(1) A, B ஆகியன மாத்திரம். (2) A, C ஆகியன மாத்திரம். (3) B, C ஆகியன மாத்திரம்.
(4) A, B, D ஆகியன மாத்திரம். (5) A, B, C ஆகியன மாத்திரம். (.........)

23. வரையறுக்கப்பட்ட மதுரா பொதுக்கம்பனியின் 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்திற்கான நிதிக் கூற்றுக்களுக்கு 30.06.2012 இல் அதன் இயக்குனர்கள் அங்கீகாரம் அளித்தனர். இக்கம்பனி தொடர்பில் 01.04.2012 இற்கும் 30.06.2012 இற்கும் இடையிலான காலப்பகுதியில் பின்வரும் நிகழ்வுகள் இடம்பெற்றன.

A - தொடர்ச்சியாக நட்டத்தை அனுபவிக்கும் வியாபாரத்தின் அலகொன்றின் செயற்பாட்டை நிறுத்துவதற்கான திட்டமொன்றின் அறிவிப்பு

B - ஐந்தொகைத் திகதியிலுள்ள முறிவடைந்த கடன்பட்டவர் ஒருவரிடமிருந்து வரவேண்டிய கணிசமான தொகை

C - சந்தைவிலை வீழ்ச்சியினால் குறுங்கால முதலீடுகளின் பெறுமதியில் ஏற்பட்ட வீழ்ச்சி

D - ஐந்தொகைத் திகதியிலுள்ள பொறுப்பொன்றினை இனங்காண்பதை உறுதிசெய்த வழக்கொன்றின் தீர்ப்பு

மேற்கூறியவற்றுள் எவை ஐந்தொகைத் திகதியில் சீராக்கம் செய்யப்படல் வேண்டும் ?

(1) A, C ஆகியன மாத்திரம்.
(2) B, D ஆகியன மாத்திரம்.
(3) A, B, D ஆகியன மாத்திரம்.
(4) B, C, D ஆகியன மாத்திரம்.
(5) A, B, C, D ஆகிய எல்லாம். (.........)

24. கட்டிடமொன்றின் எதிர்பார்க்கப்பட்ட பயன்தரு வாழ்வுக்காலத்தை மீள்மதிப்பீடு செய்யும்போது அதனால் அச்சொத்தின் வருடாந்த பெறுமானத்தேய்வில் ஏற்படும் மாற்றம் நிதிக் கூற்றுக்களில் எவ்வாறு பதியப்படும் ?

(1) கணக்கீட்டு மதிப்பீட்டின் மாற்றமொன்றாகக் கருதி நடைமுறை மற்றும் எதிர்காலங்களுக்கான இலாபம் அல்லது நட்டத்தில் சீராக்கம் செய்யப்படும்.
(2) கணக்கீட்டு மதிப்பீட்டின் மாற்றமொன்றாகக் கருதி, நிறுத்திவைத்த வருவாய்களின் ஆரம்ப மீதி மீள் குறிப்பிடப்படும்.
(3) வழு ஒன்றாகக் கருதி நிறுத்திவைத்த வருவாய்களின் ஆரம்ப மீதி மீள் குறிப்பிடப்படும்.
(4) வழு ஒன்றாகக் கருதி நடைமுறைக் காலத்திற்குரிய இலாபம் அல்லது நட்டம் சீராக்கம் செய்யப்படும்.
(5) கணக்கீட்டுக் கொள்கையின் மாற்றமொன்றாகக் கருதி, நிறுத்திவைத்த வருவாய்களின் ஆரம்ப மீதி மீள் குறிப்பிடப்படும். (.........)

25. கம்பனியொன்று 31.03.2010 இல் ரூபா 1 300 000 கிரயத்தில் நிலமொன்றைக் கொள்வனவு செய்தது. இந்நிலமானது 31.03.2011 இல் இதன் நியாயவிலை ரூபா 1 100 000 இல் மீள்மதிப்பீடு செய்யப்பட்டது. மீண்டும் இந்நிலமானது 31.03.2012 இல் அதன் நியாயவிலை ரூபா 1 600 000 இல் மீள்மதிப்பீடு செய்யப்பட்டது. நிதிக் கூற்றுக்களில் இம் மீள்மதிப்பீடுகள் எவ்வாறு அறிக்கையிடப்பட்டுள்ளது ?

| | **31.03.2011** இலுள்ளவாறு | **31.03.2012** இலுள்ளவாறு |
|---|---|---|
| (1) | ரூபா 200 000 நட்டம் இனம் காணப்பட்டுள்ளது. | ரூபா 200 000 இலாபம் இனம் காணப்பட்டும் மிகுதித் தொகை ரூபா 300 000 மீள்மதிப்பீட்டு ஒதுக்கமாகவும் கருதப்பட்டுள்ளது. |
| (2) | ரூபா 200 000 நட்டம் இனம்காணப்பட்டுள்ளது. | ரூபா 500 000 மீள்மதிப்பீட்டு ஒதுக்கமாக இனம்காணப்பட்டுள்ளது. |
| (3) | ரூபா 200 000 நட்டம் இனம்காணப்பட்டுள்ளது. | ரூபா 200 000 இலாபம் இனங்காணப்பட்டுள்ளது. |
| (4) | ரூபா 200 000 நட்டமானது மீள்மதிப்பீட்டு ஒதுக்கில் பதிவழிக்கப்பட்டுள்ளது. | ரூபா 500 000 மீள்மதிப்பீட்டு ஒதுக்கமாக இனம்காணப்பட்டுள்ளது. |
| (5) | ரூபா 200 000 நட்டமானது மீள்மதிப்பீட்டு ஒதுக்கில் பதிவழிக்கப்பட்டுள்ளது. | இலாபம் ரூபா 200 000 என இனம்காணப்பட்டும், மிகுதித் தொகை ரூபா 300 000 மீள்மதிப்பீட்டு ஒதுக்கமாகவும் கருதப்பட்டுள்ளது. |

(.........)

26. உற்பத்திப் பொருளொன்றின் உற்பத்திக் கிரயம் பின்வருவனவற்றுள் எதற்குச் சமனானது ?

(1) நேர்க்கிரயங்கள் மற்றும் மேந்தலைக் கிரயங்களின் கூட்டுத்தொகைக்கு
(2) மூலப்பொருட் கிரயங்கள் மற்றும் ஊழியக் கிரயங்களின் கூட்டுத்தொகைக்கு
(3) மூலக்கிரயம் மற்றும் உற்பத்தி மேந்தலைக் கிரயங்களின் கூட்டுத்தொகைக்கு
(4) மூலக்கிரயம் மற்றும் உற்பத்திக் கிரயங்களின் கூட்டுத்தொகைக்கு
(5) உற்பத்திக் கிரயம் மற்றும் உற்பத்தியல்லாக் கிரயங்களின் கூட்டுத்தொகைக்கு (.........)

27. மூலப்பொருள் 'X' இன் காலாண்டுக்கான கேள்வி 1 250 அலகுகள் ஆகும். இம்மூலப்பொருளின் அலகொன்றிற்கான கொள்விலை ரூபா 250 ஆகும். கட்டளையொன்றுக்கான கட்டளைக்கிரயம் ரூபா 25 ஆகவும் இருப்பு வைத்திருத்தற் கிரயமானது மூலப்பொருளின் அலகொன்றிற்கான கொள்விலையில் 10% ஆகவும் உள்ளது. இம்மூலப்பொருளின் சிக்கனக் கட்டளைத் தொகையானது பின்வருவனவற்றுள் எது ?

(1) 50 அலகுகள்
(2) 100 அலகுகள்
(3) 1 000 அலகுகள்
(4) 2 500 அலகுகள்
(5) 5 000 அலகுகள் (.........)

28. கம்பனியொன்று தனிப்பொருளொன்றை உற்பத்தி செய்து விற்பனை செய்கிறது. இதன் அலகொன்றிற்கான விற்பனை விலை ரூபா 75 ஆகவும் அலகொன்றிற்கான மாறும் கிரயம் ரூபா 50 ஆகவும் உள்ளது. நிலையான கிரயங்கள் ரூபா 50 000 ஆகும். சமப்பாட்டுப் புள்ளி (அலகுகளில்) மற்றும் 5 000 அலகுகள் விற்பனை மட்டத்தில் பாதுகாப்பு எல்லை (ரூபாவில்) என்பன முறையே பின்வருவனவற்றுள் எது ?

(1) 2 000 அலகுகளும் ரூபா 50 000
(2) 2 000 அலகுகளும் ரூபா 225 000
(3) 3 000 அலகுகளும் ரூபா 75 000
(4) 3 000 அலகுகளும் ரூபா 225 000
(5) 5 000 அலகுகளும் ரூபா 375 000

(………)

29. உற்பத்தி நிறுவனமொன்றின் சமப்பாட்டுப் புள்ளி தொடர்பில் பின்வரும் கூற்றுகளில் சரியானவை எவை ?

A - இலாபம் அன்றேல் நட்டம் இல்லை.
B - மொத்த பங்களிப்பானது மொத்த நிலையான கிரயங்களுக்குச் சமன்.
C - விற்பனை வருமானங்கள் ஆனது மொத்த கிரயங்களுக்குச் சமன்.
D - விற்பனை வருமானங்கள் ஆனது மொத்த மாறும் கிரயங்களுக்குச் சமன்.
E - மொத்த நிலையான கிரயங்கள் ஆனது மொத்த மாறும் கிரயங்களுக்குச் சமன்.

(1) A, B, C ஆகியன மாத்திரம்.
(2) A, B, D ஆகியன மாத்திரம்.
(3) A, B, C, D ஆகியன மாத்திரம்.
(4) A, C, D, E ஆகியன மாத்திரம்.
(5) A, B, C, D, E ஆகிய எல்லாம்.

(………)

30. கம்பனியொன்றின் புதிய செயற்றிட்டத்தின் காசுப் பாய்ச்சல்களைக் கணிக்கும்போது பின்வருவனவற்றுள் எவ்விடயங்கள் உள்ளடக்கப்படும் ?

A - இச்செயற்றிட்டத்தில் பயன்படுத்துவதற்கெனப் பெறப்பட்ட இயந்திரத்தின் கிரயம்
B - இந்த இயந்திரத்தின் பெறுமானத்தேய்வு
C - இந்த இயந்திரத்திலிருந்து எதிர்பார்க்கப்படும் எஞ்சிய பெறுமதி
D - இச்செயற்றிட்டத்தின் காரணமாக ஏற்படும் செயற்பாட்டுக் கிரயங்கள்
E - இச்செயற்றிட்டத்திற்கான சந்தை ஆய்வினை மேற்கொள்வதற்காக ஏற்படும் செலவுகள்

(1) A, B, D ஆகியன மாத்திரம்.
(2) A, C, D ஆகியன மாத்திரம்.
(3) A, C, E ஆகியன மாத்திரம்.
(4) A, D, E ஆகியன மாத்திரம்.
(5) A, B, C, D, E ஆகிய எல்லாம்.

(………)

**2.1.3** வினாப்பத்திரம் I இல் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளி வழங்கும் திட்டமும்.

| வினா இலக்கம் | விடை | வினா இலக்கம் | விடை |
|---|---|---|---|
| 01. | 5 | 16. | 5 |
| 02. | 3 | 17. | 2 |
| 03. | 5 | 18. | 3 |
| 04. | 2 | 19. | 1 |
| 05. | 4 | 20. | 5 |
| 06. | 3 | 21. | 5 |
| 07. | 2 | 22. | 3 |
| 08. | 3 | 23. | 2 |
| 09. | 4 | 24. | 1 |
| 10. | 4 | 25. | 1 |
| 11. | 2 | 26. | 3 |
| 12. | 1 | 27. | 2 |
| 13. | 4 | 28. | 2 |
| 14. | 4 | 29. | 1 |
| 15. | 3 | 30. | 2 |

**சரியான ஒரு விடைக்கு 04 புள்ளி வீதம் மொத்தம் 120 புள்ளிகள்**

## 2.1.4 வினாப்பத்திரம் I இல் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு எதிர்பார்க்கப்பட்ட விடைகளும் புள்ளி வழங்கும் திட்டம்.

- **31 தொடக்கம் 50 வரையுள்ள வினாக்களுக்கு சுருக்க விடைகளைப் புள்ளிக்கோட்டில் எழுதுக.**

31. *நிதிக் கணக்கீடு, முகாமைக் கணக்கீடு என்பவற்றுக்கிடையிலான வேறுபாட்டை பின்வரும் அம்சங்கள் தொடர்பில் குறிப்பிடுக.*

| அம்சங்கள் | நிதிக் கணக்கீடு | முகாமைக் கணக்கீடு |
|---|---|---|
| (1) தகவல்களைப் பயன்படுத்துவோர் | ................................... ................................... | ................................... ................................... |
| (2) அறிக்கையிடும் தடவைகள் | ................................... ................................... | ................................... ................................... |

**விடைகள்**

| | **நிதிக்கணக்கு** | **முகாமைக் கணக்கு** |
|---|---|---|
| 1. | வெளிவாரி நபர்கள் | உள்வாரி நபர்கள் (02) |
| 2. | பொதுவாக ஒரு வருடம் | தேவைக்கேற்ப தடவைகள் மாறுபடும் (02) |

32. *தனி வியாபாரமொன்றின் குறித்த வருடம் ஒன்றில் அதன் சொத்துக்கள் ரூபா 400 000 ஆல் அதிகரித்தும் பொறுப்புக்கள் ரூபா 50 000 ஆல் அதிகரித்தும் உள்ளன. இவ்வருடத்திற்கான இலாபம் ரூபா 250 000 ஆகக் காணப்படின் உரிமையாளரால் அறிமுகப்படுத்திய மேலதிக மூலதனம் எவ்வளவு ?*

.......................................................................................................................................

**விடை**

ரூபா 100, 000/= (04)

33. *1995 ஆம் ஆண்டின் 15 ஆம் இலக்க இலங்கை கணக்கீட்டு மற்றும் கணக்காய்வு நியமங்கள் சட்டத்தின் கீழ் உருவாக்கப்பட்ட* ***இரண்டு*** *சட்டரீதியான நிறுவனங்கள் எவை ?*

(1) ................................................... (2) ...................................................

**விடைகள்**

1. கணக்கீட்டு நியமக் குழு
2. இலங்கை கணக்காய்வு மற்றும் நியமங்கள் பரிசீலனை சபை
3. இலங்கை கணக்காய்வு நியமங்கள் சபை

} ஏதாவது 2 விடயங்களுக்கு 02 புள்ளிகள் (04)

34. *நிறுவனமொன்றில் பின்வரும் ஒவ்வொரு சூழ்நிலையிலும் உடன்பட்டுள்ள கணக்கீட்டுத் தகவல்களின் பண்புசார் சிறப்பியல்பு யாது ?*

| **சூழ்நிலை** | **பண்புசார் சிறப்பியல்பு** |
|---|---|
| (அ) உபகரணம் நேர்கோட்டு முறையில் ஒவ்வொரு வருடமும் பெறுமானத்தேய்விடப்படுகின்றது. | ................................................... |
| (ஆ) நிதிக் குத்தகையின் கீழ் நிறுவனமொன்றினால் பெற்றுக் கொள்ளப்பட்ட உபகரணமொன்று அதன் சொத்தாகப் பதியப்பட்டுள்ளது. | ................................................... |

**விடைகள்**

(அ) ஒப்பீட்டுத் தன்மை / மாறா நிலை (02)

(ஆ) தோற்றத்திலும் பார்க்க கருத்துக்கு முக்கியத்துவம் / நம்பகத்தன்மை (02)

35. கீழே தரப்பட்டுள்ள ஒவ்வொரு சந்தர்ப்பங்களிலும் மிகவும் தொடர்புடைய **கணக்கீட்டு எண்ணக்கருவினை** அடையாளம் காண்க.

A - வருமானமானது உழைக்கப்படும்போது அது கம்பனியின் வருமானக் கூற்றில் இனங்காணப்படும்.

B - நிதிக் கூற்றுக்கள் தயாரிக்கும் நோக்கத்திற்காகக் கம்பனியொன்றின் வாழ்வுக் காலமானது ஒவ்வொரு 12 மாதங்கள் கொண்ட காலப்பகுதியாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

C - கம்பனியின் நிதிக் கூற்றுக்களில் பணவீக்கத்திற்கான சீராக்கங்கள் செய்யப்படுவதில்லை.

D - ஏற்படக்கூடிய சாத்தியமான உத்தரவாதக் கோரிக்கை தொடர்பில் கம்பனியொன்றின் நிதிக் கூற்றுக்களில் ஏற்பாடொன்று செய்யப்படும்.

| விடயம் | கணக்கீட்டு எண்ணக்கரு |
|---|---|
| A | ..................................................................................................... |
| B | ..................................................................................................... |
| C | ..................................................................................................... |
| D | ..................................................................................................... |

**விடைகள்**

A - தேறல் எண்ணக்கரு (01)
B - கால எண்ணக்கரு (01)
C - வரலாற்றுக் கிரய எண்ணக்கரு (01)
D - பாதுகாப்பு எண்ணக்கரு / இணைதல் (01)

36. இலாப நோக்கற்ற நிறுவனமொன்றின் 'கொள்ளல் கொடுத்தல் கணக்கு', 'வருமானச் செலவுக் கணக்கு' என்பனவற்றுக்கிடையிலான வேறுபாட்டினை அவைகள் தயாரிக்கப்படும் நோக்கம், அடிப்படைகள் ஆகியன தொடர்பில் குறிப்பிடுக.

| | கொள்ளல் கொடுத்தல் கணக்கு | வருமானச் செலவுக் கணக்கு |
|---|---|---|
| நோக்கம் | ................................................ | ................................................ |
| அடிப்படை | ................................................ | ................................................ |

**விடைகள்**

| | | |
|---|---|---|
| நோக்கம் : | காசு வங்கி மீதியைக் | கணித்தல்செயற்பாட்டு பெறுபேற்றினைக் கணித்தல் (02) |
| அடிப்படை : | காசு அடிப்படை | அட்டுறு அடிப்படை (02) |

- **37 ஆம் 38 ஆம் வினாக்களுக்கு விடையளிக்கும்போது பின்வரும் தகவல்களைப் பயன்படுத்துக.**

நிறுவனமொன்றிற்கு 2012 மார்ச்சில் ஏற்பட்ட ரூபா 60 000 தொகையான அலுவலகச் செலவானது, அலுவலக உபகரணக் கணக்கில் ரூபா 600 000 ஆகப் பதியப்பட்டுள்ளது. அலுவலக உபகரணமானது வருடாந்தம் 10% நேர்கோட்டு முறையில் கிரயத்தில் பெறுமானத்தேய்விடப்படுகிறது. உபகரணத்திற்கு அந்த மாதத்திற்கான பெறுமானத்தேய்வும் செய்யப்பட்டுள்ளது.

37. 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்துக்கான இலாபத்தில் இப்பிழையினால் ஏற்பட்ட தேறிய விளைவு என்ன ?

.....................................................................................................................................

**விடை**

ரூபா 55,000 (02) வினால் இலாபம் (02) அதிகரிக்கும்

38. *அலுவலக உபகரணங்கள், அலுவலகச் செலவுகள் ஆகியவற்றுக்கான பேரேட்டுக் கணக்குகளைச் சீராக்குவதற்கான நாட்குறிப்புப் பதிவுகளை எழுதுக.*

.................................................................................................................................................

.................................................................................................................................................

.................................................................................................................................................

**விடைகள்**

| | | ரூபா | ரூபா |
|---|---|---|---|
| அலுவலகச் செலவுகள் கணக்கு | வரவு | 60,000 | |
| தொங்கல் கணக்கு | வரவு | 540,000 | |
| அலுவலக உபகரண கணக்கு | செலவு | | 600,000 |

**அல்லது** (04)

| | | | |
|---|---|---|---|
| தொங்கல் கணக்கு | வரவு | 540,000 | |
| அலுவலக உபகரணக் கணக்கு | செலவு | | 540,000 |
| அலுவலகச் செலவுகள் கணக்கு | வரவு | 60,000 | |
| அலுவலக உபகரணக் கணக்கு | செலவு | | 60,000 |

(அலுவலகச் செலவுகள் தவறுதலாக அலுவலக உபகரணக் கணக்கில் கூட்டிப் பதியப்பட்டிருப்பதை திருத்தியது)

39. *கமல் வியாபாரமானது* 31.03.2012 இல் *காணப்பட்ட தனது முழு சரக்கிருப்புக்களையும் தீயினால் இழந்துள்ளது. பின்வரும் தகவல்கள் அத்தினத்தில் கிடைக்கப்பெற்றன.*

| | | |
|---|---|---|
| 01.04.2011 இல் *சரக்கிருப்பு* | *ரூபா* | 200 000 |
| *குறித்த வருடத்தில் செய்த கொள்வனவுகள்* | *ரூபா* | 1 500 000 |
| *குறித்த வருடத்திற்கான விற்பனைகள்* | *ரூபா* | 2 000 000 |

*நிறுவனத்தின் விற்பனையில் மொத்த இலாபம்* 20% ஆகும்.

(அ) *தீயினால் அழிவடைந்த சரக்குகளின் பெறுமதி என்ன ?*

.................................................................................................................

(ஆ) *காப்புறுதிக் கம்பனியானது அழிவடைந்த சரக்குகளின் பெறுமதியில்* 80% *இனைத் தருவதாக ஒப்புக்கொள்ளுமாயின், கம்பனியின்* 31.03.2012 *இல் உள்ளவாறான மொத்தச் சொத்துக்கள் மீதான தேறிய விளைவு யாது ?*

.................................................................................................................

**விடைகள்**

(அ) ரூபா 100,000 (02)

(ஆ) ரூபா 20,000 குறையும் (02)

- **40 ஆம் 41 ஆம் வினாக்களுக்கு விடை எழுதுவதற்குப் பின்வரும் தகவல்களைப் பயன்படுத்துக.**

பின்வரும் தகவல்கள் உற்பத்தி நிறுவனமொன்றின் 2012 பெப்ரவரி மாதத்துடன் தொடர்பானவை.

| | ரூபா |
|---|---|
| மூலப்பொருள் கொள்வனவு | 300 000 |
| நேர் ஊழியம் | 170 000 |
| நேர்ச் செலவுகள் | 30 000 |
| உற்பத்தி மேந்தலைகள் | 300 000 |

| **சரக்கிருப்பு** | **29.02.2012 (ரூபா)** | **31.01.2012 (ரூபா)** |
|---|---|---|
| மூலப்பொருள் | 50 000 | 100 000 |
| குறைவேலை | 150 000 | 100 000 |
| முடிவுப்பொருள் | 100 000 | 180 000 |

- குறைவேலைகள் உற்பத்திக் கிரயத்தில் சீராக்கம் செய்யப்படுகின்றன எனக் கருதுக.
- உற்பத்தி செய்யப்படும் பொருட்கள் விற்பனைக் கிரயத்தில் 25% இலாபம் வைத்து விற்கப்படுகின்றன.

40. 2012 பெப்ரவரி மாதத்திற்கான மூலக்கிரயம், உற்பத்திக் கிரயம் ஆகியன எவ்வளவு ?

(அ) மூலக்கிரயம்: ........................................ (ஆ) உற்பத்திக் கிரயம்: ........................................

**விடைகள்**

(அ) ரூபா 550,000 (02)
(ஆ) ரூபா 800,000 (02)

41. இம்மாதத்தில் உழைக்கப்பட்ட மொத்த இலாபம் என்ன ?

........................................................................................................................

**விடை**

41. ரூபா 220,000/= (04)

- **42 ஆம் 43 ஆம் வினாக்களுக்கு விடை எழுதுவதற்குப் பின்வரும் தகவல்களைப் பயன்படுத்துக.**

வரையறுக்கப்பட்ட மதன் பொதுக்கம்பனியின் 31.03.2012, 31.03.2011 இல் உள்ளவாறான ஐந்தொகைகளிலிருந்து பெயர்த்தெடுக்கப்பட்ட பொறி மற்றும் இயந்திரம் தொடர்பான விபரங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| | **31.03.2012 (ரூபா '000)** | **31.03.2011 (ரூபா '000)** |
|---|---|---|
| பொறி மற்றும் இயந்திரங்கள் - கிரயத்தில் | 1 500 | 1 000 |
| திரண்ட பெறுமானத்தேய்வு | 500 | 400 |

**மேலதிகத் தகவல்கள்:**

கம்பனியானது ரூபா 300 000 கிரயம் கொண்ட இயந்திரமொன்றை 31.03.2012 இல் ரூபா 160 000 இற்கு விற்பனை செய்தது. இத்திகதியில் இவ் இயந்திரத்தின் கொண்டுசெல் மீதி ரூபா 200 000 ஆகும். மேலும் அதே தினத்தில் புதிய இயந்திரமொன்று காசுக்கு வாங்கப்பட்டது.

42. 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் பொறி மற்றும் இயந்திரம் தொடர்பில் முதலீட்டு நடவடிக்கைகளிலிருந்தான காசு உட்பாய்ச்சல், காசு வெளிப்பாய்ச்சல்களைக் குறிப்பிடுக.

(அ) காசு உட்பாய்ச்சல் ........................................................................

(ஆ) காசு வெளிப்பாய்ச்சல் ........................................................................

**விடைகள்**

(அ) ரூபா 160,000 (02)
(ஆ) ரூபா 800,000 (02)

43. மேற்படி கொடுக்கல் வாங்கல்களிலிருந்து ஏற்பட்ட காசற்ற விடயத்தைக் (பெறுமதியுடன்) குறிப்பிடுக.

........................................................................................................................

**விடை**

(02) (02)

பொறி விற்பனை நட்டம் ரூபா 40,000/ அல்லது
(பொறி பெறுமானத் தேய்வு ரூபா 200,000)

44. 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் கம்பனியின் செயற்பாடுகள் காரணமாக அதன் வேலைத்தளம் (நிலம்) மாசடைந்திருந்தது. இப்பகுதிக்கான சூழல் பாதுகாப்பு அதிகாரசபையானது கம்பனி இந்நிலத்தைத் துப்பரவு செய்தல் வேண்டும் எனக் கட்டளையிட்டுள்ளது. இதனை மேற்கொள்ள கம்பனிக்கு கணிசமான அளவு காசு தேவைப்படும். கம்பனியினால் 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்திற்கு இதன்பொருட்டு ஏற்பாடொன்று செய்யப்பட வேண்டுமா என்பதை காரணங்களுடன் குறிப்பிடுக.

.......................................................................................................................................

.......................................................................................................................................

.......................................................................................................................................

.......................................................................................................................................

## விடைகள்

ஏற்பாடு செய்யப்படல் வேண்டும்

காரணம்:

1. நிகழ்கால கடப்பாடு ஒன்று இருத்தல்
2. பெறுமதி நிச்சயமாக அளவிடக்கூடியதாக இருத்தல்
3. எதிர்காலத்தில் காசு வெளிப்பாய்ச்சலை ஏற்படுத்தக்கூடியதாக இருத்தல் (04)

அல்லது

ஏற்பாடு செய்யப்படல் வேண்டும்

காரணம்:

1. நிகழ்கால கடப்பாடு ஒன்று என்றாலும்
2. எதிர்காலத்தில் காசு வெளிப்பாய்ச்சலை ஏற்படுத்தக்கூடியதாக இருத்ததா
3. பெறுமதி நிச்சயமாக அளவிடக்கூடியதாக இருத்தல் முடியாது (04)

45. சப்பாத்து உற்பத்தி செய்யும் நிறுவனமொன்றுடன் தொடர்புடைய பின்வரும் ஒவ்வொரு கிரயங்களையும் **நேர்க்கிரயம்** அல்லது **நேரில் கிரயம்** என வகைப்படுத்துக.

(அ) பதனிடப்பட்ட தோலின் கிரயம் ............................................................................

(ஆ) தொழிற்சாலை முகாமையாளரின் சம்பளம் ............................................................................

(இ) இயந்திர இயக்குனர்களின் கூலிகள் ............................................................................

(ஈ) இயந்திரப் பெறுமானத்தேய்வு ............................................................................

## விடைகள்

நேர்க் கிரயம் (01)

நேரில் கிரயம் (01)

நேர்க் கிரயம் (01)

நேரில் கிரயம் (01)

46. கம்பனியொன்றின் இரண்டு உற்பத்தி மட்டங்கள் தொடர்பான கிரயத் தரவுகள் கீழே தரப்பட்டுள்ளன.

| **கிரய விடயம்** | **10 000 அலகுகள் (ரூபா)** | **20 000 அலகுகள் (ரூபா)** |
|---|---|---|
| நேர் ஊழியம் | 30 000 | 60 000 |
| மின்சாரம் | 10 000 | 15 000 |
| தொழிற்சாலை வாடகை | 15 000 | 15 000 |

ஒவ்வொரு கிரய விடயத்தையும் நிலையான கிரயம், மாறும் கிரயம், அரைமாறும் கிரயம் என வகைப்படுத்துக.

| **கிரய விடயம்** | **வகை** |
|---|---|
| (அ) நேர் ஊழியம் | :.............................................................. |
| (ஆ) மின்சாரம் | :.............................................................. |
| (இ) தொழிற்சாலை வாடகை | :.............................................................. |

## விடைகள்

46. (அ) மாறும் கிரயம் (01)

(ஆ) அரைமாறும் கிரயம் (02)

(இ) நிலையான கிரயம் (01)

● **47 ஆம் 48 ஆம் வினாக்களுக்கு விடை எழுதுவதற்குப் பின்வரும் தகவல்களைப் பயன்படுத்துக.**

கம்பனியொன்று தனிப்பொருள் ஒன்றை வாங்கி விற்பனை செய்கிறது. அலகொன்றிற்கான விற்பனை விலை ரூபா 250 ஆகும். 01.07.2012 இலுள்ள ஆரம்ப இருப்பானது அலகு ஒன்று ரூபா 150 விலையில் 100 அலகுகளைக் கொண்டு காணப்பட்டது. கம்பனியானது 10.07.2012 இல் அலகு ஒன்று ரூபா 200 விலையில் 150 அலகுகளை கொள்வனவு செய்தது. இக்கம்பனியால் 31.07.2012 இல் 200 அலகுகள் விற்கப்பட்டன.

47. 'முதல் - உள் முதல் - வெளியே' (FIFO) விலையிடல் முறையானது சரக்குகளை விநியோகிக்கும்போது பயன்படுத்தப்பட்டிருப்பின் பின்வருவனவற்றைக் கணிக்க.

(அ) 2012 யூலை மாதத்திற்கான விற்பனைக் கிரயம் ......................................................................

(ஆ) 31.07.2012 இலுள்ள சரக்கிருப்பின் பெறுமதி ......................................................................

**விடைகள்**

(அ) ரூபா 35,000 (02)

(ஆ) ரூபா 10,000 (02)

48. நிறையிடப்பட்ட சராசரி விலையிடல் முறையானது சரக்குகளை விநியோகிக்கும்போது பயன்படுத்தப்பட்டிருப்பின் 2012 யூலை மாதத்திற்கான மொத்த இலாபம் என்ன ?

..........................................................................................................................................

**விடை**

ரூபா 1 4,000 (04)

49. கம்பனியொன்றினால் உற்பத்தி செய்யப்படும் தனிப்பொருள் தொடர்பான பாதிட்ட வருமானங்கள், கிரயங்கள் பின்வருமாறு: விற்பனைத் தொகை 20 000 அலகுகள்; அலகொன்றிற்கான விற்பனை விலை - ரூபா 20; பங்களிப்பு - விற்பனை விகிதம் - 40% ; நிலையான கிரயங்கள் - ரூபா 100 000

***கணிக்குக:***

(அ) சமப்பாட்டுப் புள்ளி (அலகுகளில்) ......................................................................

(ஆ) பாதிடப்பட்ட விற்பனைத் தொகையில் இலாபம் ......................................................................

**விடைகள்**

(அ) 12,500 அலகுகள் (02)

(ஆ) ரூபா 60,000 (02)

50. ஏனைய காரணிகள் மாறாத நிலையில் முதலீட்டுச் செயற்றிட்டமொன்றுடன் தொடர்பான பின்வரும் ஒவ்வொரு விடயமும் அதன் தேறிய நிகழ்காலப் பெறுமதியை **அதிகரிக்குமா, குறைக்குமா** என்பதைக் குறிப்பிடுக.

(அ) எதிர்பார்க்கப்பட்ட காசு உட்பாய்ச்சலில் அதிகரிப்பு ....................................

(ஆ) கழிவீட்டு வீதத்தில் அதிகரிப்பு ....................................

(இ) ஆரம்ப முதலீட்டில் குறைவு ....................................

(ஈ) சொத்துக்களின் எஞ்சிய பெறுமதியில் குறைவு ....................................

**விடைகள்**

அதிகரிக்கும் (01)

குறைக்கும் (01)

அதிகரிக்கும் (01)

குறைக்கும் (01)

### 2.1.5 வினாப்பத்திரம் I இற்கு விடையளிக்கப்பட்டுள்ள விதம் பற்றிய முழுமையான அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள்

**வினாப்பத்திரம் I இற்கான விடையளித்தல் தொடர்பான அவதானிப்பு**




1, 2, 4, 9, 22, 26, 32, 45 ஆம் வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளில் 75% த்திற்கும் மேற்பட்டோர் விடையளித்துள்ளதுடன், இதில் பெரும்பாலும் பாட அறிவே தாக்கம் செலுத்தியுள்ளது. வழங்கப்பட்டுள்ள அடிப்படை நிகழ்வுகள், சீராக்கம் என்பவை தொடர்பில் விண்ணப்பதாரிகளிடம் காணப்படும் திறன் இதன் மூலம் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

மேற்குறித்த சுட்டிகளுக்கு ஏற்ப மாணவர்கள் குறைவாக விடையளித்த வினாக்கள் கட்டமைப்பிலுள்ள 33ஆம் 44ஆம் வினாக்களுக்காகும். 44ஆம் 33ஆம் வினாக்களில் காட்டப்பட்டுள்ள கணக்கியல் நியமங்களின் சட்ட வரையி தொடர்பில் மாணவர்களிடம் குறைந்த விளக்கமேக் காணப்படுகின்றமை வெளிப்படுகின்றது.

அத்துடன் வினா இலக்கம் 7, 11, 18, 19, 20, 21, 25, 27, 30, 33, 34, 37, 41, 42, 44, 48, 49 போன்றவைகளுக்கு பரீட்சார்த்திகளில் 50% இற்கும் குறைந்த வீதத்தினரே சரியாக விடையளித்துள்ளனர். அவற்றில் சிலவற்றுக்கான பகுப்பாய்வுகள் கீழே காட்டப்பட்டுள்ளன. இப்பகுப்பாய்வுக்கு வினாக்கள் தெரிவுசெய்துள்ளமை ஒரே எண்ணக்கரு அல்லது கோட்பாட்டின் அடிப்படையில் என்பது பலனாகின்றது.

7ஆம் 34ஆம் வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளின் துலங்களுக்கேற்ப அடைவு மட்டம் 38%, 39% என்ற குறைந்த மட்டத்திலேயே காணப்படுகின்றது என்பதைக் காணக்கூடியதாக உள்ளது. கணக்கீட்டுத் தகவல்களின் தர ரீதியான பண்புகளை செயற்பாட்டு ரீதியாக பயன்படுத்த முடியாதுள்ளது. கணக்கீட்டுத் தகவல்களின் தர ரீதியான பண்புகளை, நிதிக் கூற்றுக்களின் ஊடாக மாணவர்களுக்கு விளக்குதல் வேண்டும்.

11 ஆம், 37 ஆம் வினாக்களுக்கு விண்ணப்பதாரிகளின் துலங்களுக்கேற்ப அடைவு மட்டம் முறையே 46% மும் 27% மும் ஆகும். மாணவர்கள் இலாபத்தில் தாக்கத்தையேற்படுத்தும் வருமானங்கள் செலவுகள் தொடர்பிலான கொடுக்கல் வாங்கல்களை தெளிவாக இனம் காண்பதில் கஷ்டத்தை எதிர்நோக்கியுள்ளனர். இலாபத்தை சரியாகக் கணிக்கும் போது, வருமான அதிகரிப்பு, செலவு குறைவு என்பவற்றின் மூலம் இலாபம் அதிகரிக்கின்றது என்பதுடன் வருமானக்குறைவு, செலவு அதிகரிப்பு என்பவற்றின் மூலம் இலாபம் குறைவடைகின்றது என்பதனை உறுதிப்படுத்தும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்கமைத்தல் வேண்டும்.

மேற்குறித்த பகுப்பாய்வுக்கு ஏற்ப பாடத்திட்டத்திற்கு பொருந்தும் வகையில் வெளியிடப்பட்டுள்ள புத்தகங்களையும் கற்பித்தல் உபகரணங்களையும் ஒவ்வொரு நிகழ்வுகள், விடங்களுடன் சரியாக இணைப்பதற்கு ஏற்றவகையில் வகுப்பறைச் செயற்பாடுகளை பயன்படுத்தல் பொருத்தமானது.

**2.1.6 வினாப்பத்திரம் I இல் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்குரிய விடைத் தெரிவுக்கான துலங்கல் சதவீதத்தில்**

| வினா இலக்கம் | சரியான தெரிவு | ஒவ்வொரு தெரிவும் செய்யப்பட்ட மாணவர் சதவீதம் | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 | விடையளிக்காத |
| 1 | 5 | 1% | 6% | 2% | 2% | **89%** | - |
| 2 | 3 | 4% | 7% | **82%** | 5% | 2% | - |
| 3 | 5 | 10% | 24% | 2% | 13% | **51%** | - |
| 4 | 2 | 10% | **79%** | 5% | 15% | 1% | - |
| 5 | 4 | 8% | 11% | 16% | **54%** | 10% | 1 |
| 6 | 3 | 7% | 8% | **59%** | 8% | 17% | 1 |
| 7 | 2 | 14% | **38%** | 9% | 37% | 1% | 1 |
| 8 | 3 | 3% | 2% | **67%** | 8% | 20% | - |
| 9 | 4 | 4% | 3% | 3% | **82%** | 8% | - |
| 10 | 4 | 1% | 23% | 3% | **70%** | 2% | 1 |
| 11 | 2 | 4% | **45%** | 18% | 17% | 15% | 1 |
| 12 | 1 | **53%** | 21% | 16% | 5% | 4% | 1 |
| 13 | 4 | 5% | 3% | 11% | **73%** | 8% | - |
| 14 | 4 | 3% | 31% | 5% | **58%** | 2% | 1 |
| 15 | 3 | 10% | 4% | **63%** | 20% | 3% | 0 |
| 16 | 5 | 19% | 18% | 6% | 5% | **51%** | 1 |
| 17 | 2 | 6% | **64%** | 5% | 11% | 14% | - |
| 18 | 3 | 7% | 9% | **39%** | 17% | 26% | 2 |
| 19 | 1 | **48%** | 6% | 9% | 28% | 8% | 1 |
| 20 | 5 | 28% | 10% | 9% | 14% | **38%** | 1 |
| 21 | 5 | 42% | 8% | 3% | 3% | **43%** | 1 |
| 22 | 3 | 2% | 7% | **76%** | 10% | 5% | - |
| 23 | 2 | 2% | **57%** | 14% | 20% | 7% | - |
| 24 | 1 | **70%** | 13% | 2% | 5% | 10% | - |
| 25 | 1 | **34%** | 14% | 3% | 23% | 25% | 1 |
| 26 | 3 | 7% | 3% | **83%** | 4% | 3% | - |
| 27 | 2 | 27% | **45%** | 8% | 13% | 6% | 1 |
| 28 | 2 | 7% | **67%** | 9% | 10% | 6% | 1 |
| 29 | 1 | **62%** | 10% | 9% | 10% | 8% | 1 |
| 30 | 2 | 10% | **45%** | 6% | 24% | 14% | 1 |

**அட்டவணை** 01

வினா இலக்கம் 1 தொடக்கம் 30 வரையான வினாக்களுக்கான ஒவ்வொரு தெரிவுகளுக்காகவும் விண்ணப்பதாரிகள் காட்டியுள்ள துலங்கல் மேலே அட்டவணை 01 இல் காட்டப்பட்டுள்ளது. அவ் அட்டவணைக்கேற்ப சில வினாக்களுக்கு சரியான, பிழையான தெரிவுகளையும் விண்ணப்பதாரிகளுள் அதிகளவான சதவீதத்தினர் தெரிவுசெய்துள்ளமையை காணலாம். இவ்வாறான சில வினாக்கள் தொடர்பான விவரங்கள் கீழே காட்டப்பட்டுள்ளது.

வினா இலக்கம் 3 இற்கான சரியான விடையான 5 இனை 51% ஆன பரீட்சார்த்திகள் தேர்ந்தெடுத்துள்ளதோடு 24% ஆனோர் 2 ஆவது விடையினை சரியென தேர்ந்தெடுத்துள்ளனர். கொடுக்கல் வாங்கல்களைப் பதிவதற்குத் தேவையான மூல ஆவணங்கள் தொடர்பான தெளிவினை உறுதிப்படுத்திக் கொள்ளும் வகையில் வகுப்பறையினுள் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்குபடுத்துதல் வேண்டும் என்பதே இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது.

14 ஆம் வினாவிற்கு விண்ணப்பதாரிகளில் 58% ஆனோர்கள் சரியான விடையாக 4 இனைத் தெரிவு செய்துள்ளனர். 2 ஆவது விடை சரியென 31% ஆனோர் தெரிவு செய்துள்ளனர். இதற்குக் காரணம்,

அ) வினாவில் வழங்கப்பட்டுள்ள செலுத்த வேண்டிய சம்பளத்தை மாத்திரம் பொறுப்பென இனம் கண்டிருந்தமை.

ஆ) முற்பணமாகப் பெற்ற வாடகையினை பொறுப்பொன்றாக இனம் காணாமை.

நடைமுறைப் பொறுப்பில் செலுத்த வேண்டிய சம்பளம் மாத்திரமல்லாது முற்பணமாகப் பெற்ற வருமானமும் உள்ளடக்கப்படுகின்றது என்பதை உறுதிப்படுத்தும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்குபடுத்துதல் வேண்டும்.

18 ஆவது வினாவிற்கு விண்ணப்பதாரிகளில் 26% ஆனோர் 5 ஆவது தெரிவினை சரியானதென பிழையாகத் தெரிவு செய்துள்ளனர். சரியான விடையாகிய தெரிவு 3 இனைத் தெரிவு செய்தோர் 39% ம் வரை குறைவடையக் காரணம் உபகாரப் பங்கு வழங்கல் அல்லது உரித்து வழங்களலின் பின்னர் கம்பனியின் உரிமையில் ஏற்படும் தாக்கம் தொடர்பிலான பயிற்சிகளை வகுப்பறைக் கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டின் போது மேற்கொள்ளுதல் வேண்டும்.

19 ஆவது வினாவிற்கு விண்ணப்பதாரிகளில் 48% ஆனோர் சரியான தெரிவாகிய 01 இனைத் தெரிவு செய்துள்ளனர். 4 ஆவது தெரிவு சரியென 28% ஆனோர் தெரிவு செய்துள்ளனர். நிதி உறுதித்தன்மைக்குரிய விகிதம் தொடர்பிலான விளக்கம் குறைந்த மட்டத்தில் காணப்பட்டமையே இதற்கான காரணமாகும். கணக்கீட்டு விகிதங்களைக் கற்பிக்கும் போது விகிதங்களை மாத்திரமன்றி, விகிதங்கள் எந்நோக்கங்களுக்காகக் கணக்கிடப்படுகின்றது என்பது தொடர்பிலான விளக்கமொன்றினையும் பெற்றுக் கொடுத்தல் வேண்டும்.

20 ஆவது வினாவிற்கு விண்ணப்பதாரிகளில் 28% ஆனோர் 1 ஆவது தெரிவினை சரியென பிழையாகத் தெரிவு செய்துள்ளனர். சரியான தெரிவாகிய 5 இனைத் தெரிவு செய்தோர் 38% வரை குறைந்தமைக்கான காரணம் கொடுக்கல் வாங்கல் ஒன்றின் காரணமாக வீதத்திற்கு ஏற்படும் தாக்கம் தொடர்பிலான விளக்கம் குறைவினாலாகும். அதனால் அவ்வாறான செயற்பாடுகளை வகுப்பறையில் மேற்கொள்ளுதல் வேண்டும்.

21 ஆவது வினாவிற்கு விண்ணப்பதாரிகளில் 42% ஆனோர் 1 ஆவது தெரிவு சரியானதென தவறாகத் தெரிவு செய்துள்ளனர். சரியான தெரிவாகிய 5 இனைத் தெரிவு செய்தோர் 43% ஆகக் குறைந்தமைக்கு காரணமாக வருடத்தினுள் கடன் பட்டோர் மீதி மாற்றமடைவதன் ஊடாக காசுப்பாய்ச்சலுக்கு ஏற்படும் தாக்கத்தினை விளங்காமையைக் குறிப்பிட முடியும். வருடத்தினுள் கடன் பட்டோர் மீதி குறைவடைந்தமை காசு உருவாக்கமொன்றாகவும், கடன் பட்டோர் மீதி அதிகரித்தமை காசு உள்ளீடொன்றாகவும் இனங்காணக்கூடியவாறு மாணவர்களுக்கு விளக்குதல் வேண்டும்.

23 ஆவது வினாவிற்கு விண்ணப்பதாரிகளில் 57% ஆனோர் சரியான தெரிவு 2 இனைத் தெரிவு செய்துள்ளனர். பிழையான தெரிவாகிய 3 இனை 14% ஆனோரும், 4 இனை 20% த்தினரும் தெரிவு செய்துள்ளனர். அறிக்கைப்படுத்தப்பட்ட காலத்திற்குப் பின்னரான நிகழ்வுகள் தொடர்பில் விளக்கமொன்று காணப்படாமையே இதற்குக் காரணமாகும். அறிக்கைப்படுத்தப்படும் காலப்பகுதிக்குப் பின்னரான நிகழ்வுகள் தொடர்பிலான நியமங்களினூடான சீராக்கம் செய்யக்கூடிய நிகழ்வுகள், சீராக்க முடியாத நிகழ்வுகள் தொடர்பில் விளக்கமொன்றை உறுதிப்படுத்தும் வகையில் கற்பித்தல் கருமங்களை ஒழுங்குப்படுத்தல் வேண்டும்.

25 ஆவது வினாவிற்கு விண்ணப்பதாரிகளில் 23% ஆனோர் பிழையான தெரிவு 4 இனைத் தெரிவு செய்துள்ளனர். அத்தடன் 25% ஆனோர் 5 இனைப் பிழையாகத் தெரிவு செய்துள்ளனர். சரியான தெரிவு 1 இனைத் தெரிவு செய்தோர் 34% வரை குறைவடைவதற்குக் காரணம் மீள் மதிப்பீட்டு நட்டம், மீள் மதிப்பீட்டு மேலதிகம் என்பவற்றை சரியாகக் கணக்குளில் பதிவு செய்வது தொடர்பிலான விளக்கமொன்று இல்லாமையேயாகும். LKAS - 16 இற்கேற்ப மீள் மதிப்பீட்டு மேலதிகம், நட்டம் என்பவற்றைக் கணக்குகளில் பதிவு செய்வதுடன் இணைந்த விதந்துரைப்புக்கள் தொடர்பிலான விளக்கத்தினை மாணவர்களுக்கு பெற்றுக் கொடுத்தல் வேண்டும்.

**2.1.7 வினாப்பத்திரம் I இல் 31 தொடக்கம் 50 வரையான வினாக்களுக்கு புள்ளிகள் வழங்கப்பட்டுள்ள விதம்.**

| வினா | புள்ளிகள் பெற்றுள்ள சதவீதம் | | | | | |
|---|---|---|---|---|---|---|
| இலக்கம் | புள்ளி 0 | புள்ளி 1 | புள்ளி 2 | புள்ளி 3 | புள்ளி 4 | விடையளிக்காத |
| 31 | 19% | - | 26% | - | 47% | 8% |
| 32 | 19% | - | - | - | 75% | 6% |
| 33 | 55% | - | 22% | - | 7% | 16% |
| 34 | 34% | - | 34% | - | 22% | 10% |
| 35 | 8% | 16% | 27% | 34% | 13% | 2% |
| 36 | 27% | - | 26% | - | 37% | 10% |
| 37 | 56% | - | 14% | - | 19% | 11% |
| 38 | 36% | - | - | - | 49% | 15% |
| 39 | 27% | - | 23% | - | 40% | 10% |
| 40 | 27% | - | 22% | - | 45% | 6% |
| 41 | 53% | - | - | - | 33% | 14% |
| 42 | 23% | - | 40% | - | 28% | 9% |
| 43 | 26% | - | 18% | - | 45% | 11% |
| 44 | 58% | - | - | - | 14% | 28% |
| 45 | 1% | 3% | 16% | 24% | 55% | 1% |
| 46 | 6% | 20% | 9% | 3% | 60% | 2% |
| 47 | 34% | - | 10% | - | 48% | 5% |
| 48 | 57% | - | - | - | 26% | 17% |
| 49 | 38% | - | 18% | - | 31% | 13% |
| 50 | 3% | 11% | 39% | 24% | 20% | 3% |

**அட்டவணை** 02

வினா 33 தொடர்பில் விண்ணப்பதாரிகளின் 55% ஆனோர் 0 புள்ளியினைப் பெற்றுள்ளனர். உச்சப்புள்ளியாகிய 4 இனை 7% ஆனோர் மாத்திரமே பெற்றுள்ளனர். 1995 ஆம் 15 ஆம் இலக்க இலங்கை கணக்கீட்டு, கணக்காய்வு நியதிச் சட்டத்திற்கேற்ப கணக்கீட்டு நியமங்களைத் தயாரித்தலும் அதனைப் பரிட்சிப்பதற்குள்ள நிறுவனங்கள் தொடர்பிலான விளக்கம் குறைந்த மட்டத்தில் காணப்பட்டமையே இதற்கான காரணம் எனக் கூறலாம். 1995 ஆம் 15 ஆம் இலக்க இலங்கை கணக்கீட்டு, கணக்காய்வு நியதிச் சட்டம் தொடர்பில் மாணவர்களை தெளிவு படுத்துதல் வேண்டும்.

வினா இலக்கம் 44 இற்கு விண்ணப்பதாரிகளில் 58% ஆனோர் 0 புள்ளிகளைப் பெற்றுள்ளதுடன் 14% ஆனோர் உச்ச புள்ளியாகிய 4 இனைப் பெற்றுள்ளனர். LKAS - 37 ஏற்பாடு தொடர்பிலான சரியான விளக்கம் மாணவர்களிடம் இல்லை என்பது இதன் மூலம் வெளிப்படுத்தப்படுகின்றது. LKAS - 37 ஏற்பாடு தொடர்பிலான நிபந்தனைகள் தொடர்பில் மாணவர்களுக்கு தெளிவான விளக்கமொன்றினை பெற்றுக் கொடுத்தல் வேண்டும்.

வினா இலக்கம் 48 இற்கு விண்ணப்பதாரிகளில் 57% ஆனோர் 0 புள்ளிகளைப் பெற்றுள்ளதுடன் 26% ஆனோர் உச்ச புள்ளியாகிய 4 இனைப் பெற்றுள்ளனர். சரக்குகளை விநியோகிக்கும்போது விலையிடும் முறைகளிலொன்றாகிய நிறையிடப்பட்ட சராசரி முறையின் கீழ் விநியோகக் கிரயத்தினை கணிப்பிடுவதில் மாணவர்களிடம் காணப்பட்ட விளக்கமின்மையே இதற்கான காரணமாகும். LKAS - 2 இருப்புத் தொடர்பிலான அங்கீகரிக்கப்பட்ட விலையிடல் முறைகளாகிய F.I.F.O, W.A.C முறைகளின் கீழ்

1. வழங்கல் கிரயம்
2. இருப்பின் பெறுமதி
3. மொத்த இலாபத்தினைக் கணித்தல்

என்பவை தொடர்பிலான விளக்கத்தினைப் பெறும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்குபடுத்துதல் வேண்டும்.

## 2.2 வினாப்பத்திரம் II உம் விடையளிக்கப்பட்டமை தொடர்பான தகவல்கள்

### 2.2.1 வினாப்பத்திரம் II இன் கட்டமைப்பு

நேரம் 3 மணித்தியாலம்

இவ்வினாப்பத்திரம் 07 வினாக்களை கொண்டுள்ளது. முதலாம், இரண்டாம் வினாக்கள் கட்டாயமானவை என்பதுடன், ஒரு வினாவிற்கு 20 புள்ளிகள் வீதம் அவற்றிற்கு 40 புள்ளிகளாகும். ஏனைய 05 வினாக்களில் 04 வினாக்களைத் தெரிவு செய்தல் வேண்டும் என்பதுடன் அவற்றில் ஒரு வினாவிற்கு 15 புள்ளிகள் வீதம் மொத்தம் 60 புள்ளிகளாகும். மொத்தம் 100 புள்ளிகளாகும்.

இறுதிப் புள்ளியினைக் கணிப்பிடல் : வினாப்பத்திரம் I = 100 புள்ளிகள்
வினாப்பத்திரம் II = 100 புள்ளிகள்
இறுதிப் புள்ளிகள் 200 ÷ 2 = 100

* விடைத்தாள் மதிப்பீட்டின் போது சகல வினாக்களுக்கும் புள்ளிகள் இரட்டிப்பாக்கி வழங்கப்படும். அதற்கேற்ப இறுதிப் புள்ளியினைக் கணிப்பிடல் :
வினாப்பத்திரம் I = 200 புள்ளிகள்
வினாப்பத்திரம் II = 200 புள்ளிகள்
இறுதிப் புள்ளிகள் 400 ÷ 4 = 100

**2.2.2 வினாப்பத்திரம் II - எதிர்பார்க்கப்பட்ட விடைகள், புள்ளி வழங்கும் திட்டம், விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும்.**

**வினாப்பத்திரம் II இல் ஒவ்வொரு வினாக்களுக்கும் விடையளிக்கப்பட்டமை தொடர்பான அவதானிப்பு, வரைபடம் 2, 3, 4. என்பவற்றின் அடிப்படையில் இது தயாரிக்கப்பட்டுள்ளது. வினாக்களுக்கு உரிய வரைபடங்கள் அந்தந்த வினாவினதும் அவதானிப்பு, முடிவுகளுடனும் உள்ளது.**

## வினாப்பத்திரம் II

### வினா இலக்கம் - 01

1. வரையறுக்கப்பட்ட ஜமுனா பொதுக் கம்பனியின் 31.03.2012 இல் உள்ளவாறான பரீட்சை மீதி கீழே தரப்பட்டுள்ளது.

| | வரவு (ரூ.'000) | செலவு (ரூ.'000) |
|---|---|---|
| நிலம் (கிரயத்தில்) | 2 200 | |
| தளவாடங்களும் பொருத்துக்களும் (கிரயத்தில்) | 4 000 | |
| 01.04.2011 இல் திரண்ட பெறுமானத்தேய்வு - தளவாடங்களும் பொருத்துக்களும் | | 400 |
| வியாபாரக் கடன்பட்டோர் | 400 | |
| 01.04.2011 இல் ஐயக்கடனுக்கான ஏற்பாடு | | 50 |
| 01.04.2011 இல் சரக்கிருப்பு (கிரயத்தில்) | 500 | |
| காசும் காசுக்கு சமமானவைகளும் | 150 | |
| விற்பனைகள் | | 4 800 |
| கொள்வனவுகள் | 1 500 | |
| செலவுகள் | 1 000 | |
| வியாபாரக் கடன்கொடுத்தோர் | | 300 |
| கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் (400 000 பங்குகள்) | | 3 000 |
| 01.04.2011 இல் நிறுத்தி வைத்த வருவாய்கள் | | 1 200 |
| | **9 750** | **9 750** |

**மேலதிகத் தகவல்கள் :**

(அ) பரீட்சை மீதியில் காணப்படும் செலவுகள் பின்வரும் உருப்படிகளைக் கொண்டுள்ளன:

| செலவு வகை | ரூபா.'000 |
|---|---|
| விநியோகம் | 450 |
| நிர்வாகம் | 500 |
| நிதி | 50 |
| **மொத்தம்** | **1 000** |

(ஆ) 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனத்தின் மாற்றம் பின்வருமாறு:

| | ரூபா. '000 |
|---|---|
| 01.04.2011 இல் மீதி | 2 000 |
| வருட காலத்தினுள் வழங்கிய 100 000 பங்குகளின் பெறுமதி | 1 000 |
| 31.03.2012 இல் மீதி | 3 000 |

(இ) 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்திற்கான நிதிக்கூற்றுக்களைத் தயாரிக்க முன்னர் பின்வரும் சீராக்கங்கள் செய்யப்படல் வேண்டும்.

(i) உயர்தொழில் தகைமை பெற்ற மதிப்பீட்டாளரால் நிலமானது 31.03.2012 இல் ரூபா 2 500 000 ஆக மீள் மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது.

(ii) தளவாடங்களும் பொருத்துக்களும் நேர்கோட்டு முறையில் கிரயத்தில் வருடாந்தம் 10% பெறுமானத்தேய்வு செய்யப்படல் வேண்டும்.

(iii) வருட இறுதியில் காணப்படும் வியாபாரக் கடன்பட்டோருக்கு ஐயக்கடனுக்காக 10% ஏற்பாடு செய்வது கம்பனியின் கொள்கையாகும்.

(iv) 31.03.2012 இல் சரக்கிருப்புகளின் கிரயம் ரூபா 450 000 ஆகும். இத்திகதியில் இச்சரக்குகளின் தேறிய தேறக்கூடிய பெறுமதி ரூபா 500 000 ஆக மதிப்பிடப்பட்டுள்ளது.

(v) கம்பனியானது ஆறு மாதகால உத்தரவாதத்துடன் பொருட்களை விற்பனை செய்கிறது. இந்த உத்தரவாதத்திற்காக ரூபா 60 000 ஏற்பாடு செய்ய வேண்டும் என நம்பகரமானதாக மதிப்பீடு செய்துள்ளது.

(vi) கம்பனியானது பொருட்களை விநியோகிப்பதற்காகப் பயன்படுத்துவதற்கு நிதிக் குத்தகையின் கீழ் 01.04.2011 இல் மோட்டார் வாகனமொன்றை வாங்கியது. இத்திகதியில் இம்மோட்டார் வாகனத்தின் நியாயமான பெறுமதி ரூபா 2 500 000 ஆக இருந்ததுடன் அது ஆகக் குறைந்த குத்தகைக் கொடுப்பனவுகளின் நிகழ்காலப் பெறுமதிக்குச் சமமாக இருந்தது. பின்வரும் தகவல்களும் கிடைக்கக்கூடியதாகவுள்ளன.

குத்தகைக் காலம் - 5 வருடங்கள்

மோட்டார் வாகனத்தின் பயன்தரு வாழ்வுக்காலம் - 5 வருடங்கள்

வருடாந்த குத்தகைத் தவணைக் கட்டணம் (வருட இறுதியில் செலுத்த வேண்டியது) ரூபா 600 000 (இவற்றுள் ரூபா 100 000 வட்டியாகும்).

31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் குத்தகைக் கடன்கொடுத்தோருக்குச் செலுத்திய குத்தகைத் தவணைக் கட்டணம் ஆனது வியாபாரக் கடன்கொடுத்தோர் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது. இது சம்பந்தமாக வேறு பதிவுகள் எதுவும் செய்யப்படவில்லை. மோட்டார் வாகனங்களுக்கு நேர்கோட்டு முறையில் கிரயத்தில் வருடாந்தம் 20% பெறுமானத்தேய்விடுவது கம்பனியின் கொள்கையாக உள்ளது.

(vii) கம்பனியானது தனது எல்லா நடைமுறையல்லாச் சொத்துக்களையும் 01.10.2011 இல் காப்புறுதி செய்துள்ளதுடன் 30.09.2012 இல் முடிவடையும் ஒரு வருடத்துக்கான காப்புறுதிக் கட்டணம் ரூபா 120 000 செலுத்தியுள்ளது. செலுத்திய இக்காப்புறுதியானது நிர்வாகச் செலவுகளுள் உள்ளடங்கியுள்ளது.

(viii) 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்துக்கான வருமான வரியானது வரிக்கு முந்திய இலாபத்தின் 1/3 என மதிப்பிடப்பட்டுள்ளது.

(ix) இயக்குனர்சபை இவ்வருடத்துக்கான இறுதிப் பங்கிலாபமாக ரூபா 150 000 இனைப் பிரேரித்துள்ளது.

(x) நிறுத்திவைத்த வருவாய்களிலிருந்து ரூபா 1 000 000 இனை மாற்றுவதன் மூலம் வருட இறுதியில் பொது ஒதுக்கத்தினை உருவாக்குவதெனத் தீர்மானிக்கப்பட்டுள்ளது.

**வேண்டப்படுவது:**

ஜமுனா கம்பனிக்கான பின்வரும் நிதிக் கூற்றுக்களைப் பிரசுரிக்கும் நோக்கத்துக்காக (குறிப்புகள் உட்பட) தயாரிக்குக.

(1) 31.03.2012 இல் முடிவடையும் வருடத்துக்கான வருமானக் கூற்று

(2) 31.03.2012 இல் முடிவடையும் வருடத்துக்கான உரிமையாண்மை மாற்றல் கூற்று

(3) 31.03.2012 இல் உள்ளவாறான ஐந்தொகை **(20 புள்ளிகள்)**

(1)

**வரையறுக்கப்பட்ட ஜமுனா பொதுக்கம்பனி**

**2012.03.31 இல் முடிவடைந்த வருடத்திற்கான** (01)

**வருமானக் கூற்று**

| | குறிப்பு | | (ரூபா'000) | |
|---|---|---|---|---|
| விற்பனை | | | 4800 | |
| விற்பனைக் கிரயம் | | | (1550) | (02) → செய்கையை பார்க்குக |
| மொத்தலாபம் | | | 3250 | (01) |
| விநியோகச் செலவுகள் | | 1000 (03) | | செய்கையை பார்க்குக |
| நிர்வாகச் செலவுகள் | | 840 (02) | | |
| நிதிச் செலவுகள் | | 150 (01) | | |
| | | | (1990) | |
| வரி கழிக்குமுன் | 01 | | 1260 | |
| வருமானவரி | | (02) | (420) | |
| ஆண்டுக்கான இலாபம் (01) | | | 840 | |

குறிப்பு: 01

வரிகழிக்குமுன் செயற்பாட்டு இலாபம் பின்வரும் செலவுகள் கழித்தபின்

| | |
|---|---|
| பெறுமானத்தேய்வு | 100 |
| விற்பனை உத்தரவாதம் | 900 |
| குத்தகை வட்டி | 60 |
| நிதிச் செலவு | 50 |

(ஏதாவது இரு விடயங்களுக்கு தொகைகளுடன் **02 புள்ளிகள்** வீதம்)

**(15 புள்ளிகள்)**

செய்கை (ரூ'000) :

| விற்பனைக் கிரயம் | | | விநியோகச் செலவுகள் | | |
|---|---|---|---|---|---|
| ஆரம்ப தொகை | 500 | (01) | விநியோகச் செலவுகள் | 450 | (01) |
| கொள்வனவு | 1500 | | ஐயக்கடன் (மேலதிக ஒதுக்கம்) | (10) | (01) |
| | 2000 | | விற்பனை உத்தரவாதம் | 60 | |
| இறுதித் தொகை | (450) | (01) | மோட்டார் வாகன தேய்வு | 500 | (01) |
| | 1550 | | | 1000 | |

| நிர்வாகச் செலவுகள் | | | நிதிச் செலவுகள் | | |
|---|---|---|---|---|---|
| நிர்வாகச் செலவுகள் | 440 {500 | (01) | நிதிச் செலவுகள் | 50 | |
| காப்புறுதி முற்பணம் | (60)} | | குத்தகை வட்டி | 100 | (01) |
| களபாடத் தேய்வு | 400 | (01) | | 150 | |
| | 840 | | | | |

(2)

வரையறுக்கப்பட்ட ஜமுனா பொதுக்கம்பனி
2012.03.31 இல் முடிவடைந்த வருடத்திற்கான
உரிமையாண்மை மாற்றக் கூற்று

(ரூபா'000)

| | கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | மீள்மதிப்பீட்டு ஒதுக்கம் (01) | பொது ஒதுக்கம் | நிறுத்தி வைத்த இலாபம் | மொத்தம் |
|---|---|---|---|---|---|
| 01/04/2011 இல் மீதி | 2000 | - | - | 1200 | 3200 |
| சாதாரண பங்கு வழங்கல் | - | - | - | (01) 840 | 840 |
| நிலம் மீள்மதிப்பீடு | 1000 (01) | - | - | | 1000 |
| இவ்வாண்டு இலாபம் | - | 300 (01) | - (01) | - | 300 |
| பொது ஒதுக்கம் | - | - | 1000 | (1000) | |
| 2012.03.31 இல் மீதி | 3000 | 300 | 1000 | 1040 | 5340 |

(01)

**(06 புள்ளிகள்)**

**வரையறுக்கப்பட்ட ஜமுனா பொதுக் கம்பனி**
**2012.03.31 இல் உள்ளவாறான ஐந்தொகை** (01)

| | குறிப்பு | | (ரூ'000) |
|---|---|---|---|
| **நடைமுறை அல்லாத சொத்துக்கள்** | | | 7700 (02) பெற்றத் தெகை மாற்றப்பட்டிருப்பின் (01) |
| ஆதனம், பொறி, உபகரணம் | 02 | | |
| **நடைமுறைச் சொத்துக்கள்** | | | |
| கையிருப்பு | | 450 (01) | |
| வியாபாரக் கடன்பட்டோர் | | 360 (01) | |
| காப்புறுதி முற்பணம் | | 60 (01) | |
| காசும் காசுக்கு சமமானவையும் | | 150 | 1020 |
| **உரிமையாண்மையும் பொறுப்புக்களும்** | | | 8720 |
| கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | | | |
| 400000 பங்குகள் | | | 3000 (01) |
| **ஒதுக்கங்கள்** | | | |
| மீள்மதிப்பீட்டு ஒதுக்கம் | | 300 | |
| பொது ஒதுக்கம் | (01) | 1000 | |
| நிறுத்தி வைத்த வருவாய்கள் | | 1040 | 2340 |
| **நடைமுறை அல்லாத பொறுப்புக்கள்** | | | |
| குத்தகைக் கடன் | | | 1500 (01) |
| **நடைமுறைப் பொறுப்புக்கள்** | | | |
| வியாபாரக் கடன்கொடுத்தோர் | | 900 (02) | |
| விற்பனை உத்தரவாதம் | | 60 (01) | |
| குத்தகைக் கடன்கொடுத்தோர் | | 500 (01) | |
| அட்டுறு வருமானவரி | (01) | 420 | 1880 |
| | | | 8720 |

குறிப்பு 02 :

நடைமுறை அல்லாத சொத்துக்கள்

(ரூ'000)

| | நிலம் | தளபாடம் | மோட்டார் வாகனம் | மொத்தம் |
|---|---|---|---|---|
| **கிரய உருப்படி** | | | | |
| 01.04.2011 இல் மீதி | 2200 | 4000 | - | 6200 |
| இவ்வாண்டு சேர்ப்பு | - | - | 2500 (01) | 2500 |
| மீள் மதிப்பீடு | 300 (01) | - | - | 300 |
| **31.03.2012 ஆம் திகதிக்கு பெறுமானத்** | 2500 | 4000 | 2500 | 9000 |
| **தேய்வு :** | | | | |
| 01.04.2011 இல் மீதி | - | 400 | - | 400 |
| இவ்வாண்டு தேய்வு | - | 400 (01) | 500 (01) | 900 |
| 31.03.2012 திகதிக்கு பெறுமானம் | - | 800 | 500 | 1300 |
| 31.03.2012 இல் தேறிய பெறுமதி | 2500 | 3200 | 2000 | 7700 |

உயர் தொழில் தகைமை பெற்ற மதிப்பீட்டாளரால் நிலமானது 31.03.2012 இல் ரூபா 2500 000 ஆக மீள்மதிப்பிடப்பட்டு புத்தகங்களில் காட்டப்பட்டுள்ளது.

குறிப்பு 03 :

இயக்குனர் சபை இவ்வருடத்திற்கான இறுதிப் பங்கிலாபமாக ரூபா 150000 இனைப் பிரேரித்துள்ளது. (01)

**(19 புள்ளிகள்)**

**1 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவுக்காக ஒதுக்கப்பட்ட புள்ளி 20 X 2 = 40 புள்ளிகளாகும்.
1 ஆம் வினா கட்டாய வினாவாக அமைந்தாலும் 97% ஆனவர்களே இதற்கு விடையளித்துள்ளனர். இவ்வினாவிற்கான மொத்தப்புள்ளிகள் 40 ஆகும்.
இதில் 00 - 10 ஆயிடையில் 31%
11 - 20 ஆயிடையில் 22%
21 - 30 ஆயிடையில் 29%
31 - 40 ஆயிடையில் 18%
ஆனோர் புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.
இவ்வினாவுக்கு 31 புள்ளிகளுக்கு மேல் 18% இத்தினர் பெற்றுள்ளதுடன், 31% ஆனவர்கள் 10 அல்லது அதற்கு குறைவான புள்ளிகளையேப் பெற்றுள்ளனர்.




இவ்வினாவில் 3 பிரிவுகள் உள்ளன. இதில் 1 ஆம் பிரிவுக்கு விடையளித்துள்ளளோரில் 52% ஆனோர்கள் சிறந்த முறையில் விடையளித்திருந்தனர்.

1(1) பகுதியின் இலகுத்தன்மை 52% ஆகக் காணப்படுவதுடன் அதற்குக் காரணம் பிரதானமாக பொறுப்புச் சான்றிதழை நிதிக்கூற்றில் ஒதுக்கமாக இனங்காணாமை. அறிக்கைப்படுத்தப்பட்ட காலப்பகுதிக்கு பின்னராக நிகழ்வுகளுக்கான நியமங்கள் தொடர்பில் தெளிவான விளக்கமில்லாமை என்பவை காரணமாக வருடத்தினுள் முன் மொழியப்பட்ட ரூபா 150,000 த்தை இறுதிப் பங்கிலாபமாக நிதிக் கூற்றில் இனங்கண்டிருந்தமையைக் குறிப்பிட முடியும். கம்பனிகளின் நிதிக் கூற்றுக்களைத் தயாரிக்கும் போது தேவைப்படுகின்ற கணக்கீட்டு நியமங்கள் தொடர்பிலான அறிவு குறைந்த மட்டத்தில் காணப்படுவதனால் அக்கணக்கீட்டு நியமங்கள் தொடர்பிலான விளக்கத்தினை உறுதிப்படுத்தும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளை ஒழுங்குபடுத்தி மாணவர்களினுள் திறனை விருத்திச் செய்தல் வேண்டும்.

1 (3) பகுதியின் ஐந்தொகையில் நிதிக் குத்தகையின் கீழ் கொள்வனவு செய்த மோட்டார் வாகனத்தை சொத்தொன்றாக இனம் காணாமை, குத்தகைத் தவணைக் கட்டணத்தை வியாபாரக் கடன் கொடுத்தோர் கணக்கில் வரவு வைத்தமையால் ஏற்பட்ட பிழையினைத் திருத்தாமை குத்தகை கடன் கொடுத்தோர் மீதியினை நடைமுறை பொறுப்பு நடைமுறை அல்லாத பொறுப்பு என்ற வகையில் தெளிவாகப் பிரித்து வேறுபடுத்தாமை போன்றவைகள் பலவீனமான மட்டத்தில் காணப்படுகின்றமை தெரிய வருகின்றது. நிதிக் குத்தகையில் கொள்வனவாளரின் புத்தகங்களில் கணக்கு வைத்தல் தொடர்பிலான அறிவு குறைவாக காணப்படுகின்றமையால் அது தொடர்பிலான அறிவினைக் கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டின் போது மேற்கொள்ளுதல் வேண்டும்.

## வினா இலக்கம் - 02

2. (அ) ***பிரியா, ரமேஸ்*** என்போர் இலாப நட்டங்களை 3:2 விகிதத்தில் பகிர்ந்து ஆலோசனை வழங்கும் நிறுவனம் ஒன்றின் பங்காளர்களாக இருந்தனர். இப் பங்குடைமையின் 31.03.2011 இல் உள்ளவாறான ஐந்தொகை பின்வருமாறு இருந்தது.

| | ரூ. '000 | ரூ. '000 |
|---|---|---|
| ***நடைமுறையல்லாச் சொத்துக்கள்*** | | |
| ஆதனம், பொறி மற்றும் உபகரணங்கள் - கிரயம் | 1 300 | |
| திரண்ட பெறுமானத்தேய்வு | (260) | 1 040 |
| ***நடைமுறைச் சொத்துக்கள்*** | | |
| சரக்கிருப்பு - காகிதாதிகள் | 100 | |
| ஆலோசனைக் கட்டணங்கள் - வருமதி | 300 | |
| காசு | 60 | 460 |
| | | **1 500** |
| ***மூலதன கணக்குகள்*** | | |
| பிரியா | 600 | |
| ரமேஸ் | 400 | 1 000 |
| ***நடைமுறைக் கணக்குகள்*** | | |
| பிரியா | 150 | |
| ரமேஸ் | 150 | 300 |
| ***நடைமுறைப் பொறுப்புக்கள்*** | | |
| அலுவலகச் செலவுகள் சென்மதி | | 200 |
| | | **1 500** |

**மேலதிகத் தகவல்கள்:**

(i) 01.04.2011 இல் ***சுதர்சன்*** பங்குடைமையில் பங்காளராக அனுமதிக்கப்பட்டுள்ளார். இவர் இத்தினத்தில் மூலதனமாக ரூபா 400 000 காசாகக் கொடுத்துள்ளார். பங்குடைமையின் நன்மதிப்பானது 01.04.2011 இல் ரூபா 1 000 000 ஆக மதிப்பிடப்பட்டுள்ளது. இது சம்பந்தமான எல்லாச் சீராக்கங்களும் பங்காளரின் மூலதனக் கணக்கினூடாக மேற்கொள்ளப்படல் வேண்டும். புதிய பங்குடைமை ஒப்பந்தத்தில் பின்வரும் நிபந்தனைகள் பிரியா, ரமேஸ், சுதர்சன் என்போர்களினால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளன.

(அ) ஒவ்வொரு பங்காளரும் ரூபா 10 000 மாதாந்த சம்பளம் பெற உரித்துடையவர்.

(ஆ) இலாப நட்டங்கள் பிரியா, ரமேஸ், சுதர்சன் ஆகியோருக்கிடையில் முறையே 2:2:1 என்னும் விகிதத்தில் பகிரப்படல்.

(ii) பங்குடைமையின் 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்துக்கான காசுக் கொடுக்கல் வாங்கல்களுக்கான சுருக்கம் பின்வருமாறு இருந்தது.

| | ரூ. '000 |
|---|---|
| **பெறுவனவுகள்** | |
| ஆலோசனைக் கட்டணங்கள். (31.03.2011 இல் வருமதியான தொகை உட்பட) | 1 300 |
| சுதர்சன் பங்காளராக அனுமதிக்கையில் பெறப்பட்ட தொகை | 400 |
| **கொடுப்பனவுகள்** | |
| காகிதாதிகள் கொள்வனவு | 200 |
| சம்பளங்கள் - அலுவலக உத்தியோகத்தர்கள் | 140 |
| அலுவலகச் செலவுகள் | 400 |
| **பற்றுக்கள் :** | |
| பிரியா | 125 |
| ரமேஸ் | 110 |
| சுதர்சன் | 105 |
| 01.10.2011 இல் நிலையான வைப்பில் இடப்பட்ட தொகை (ஒரு வருடத்திற்கு வருடாந்தம் 12% வட்டியில்) | 500 |

(iii) பங்குடைமையின் ஆதனம், பொறி மற்றும் உபகரணங்களுக்கான பெறுமானத்தேய்வு நேர்கோட்டு முறையில் கிரயத்தில் வருடாந்தம் 20% செய்யப்படுகிறது.

(iv) 31.03.2012 இல் உள்ளபடியான நடைமுறைச் சொத்துக்கள், நடைமுறைப் பொறுப்புக்கள் ஆகியன:

(அ) சரக்கிருப்பு - காகிதாதிகள் ரூபா 50 000.

(ஆ) வருமதி ஆலோசனைக் கட்டணங்கள் - ரூபா 500 000.

(இ) அலுவலகச் செலவுகள் சென்மதி - ரூபா 150 000.

**வேண்டப்படுவது :**

பிரியா, ரமேஸ், சுதர்சன் ஆகியோரின் பங்குடைமைக்கான பின்வருவன:

(1) 31.03.2012 இல் முடிவடையும் வருடத்துக்கான வருமானக் கூற்று (பங்காளருக்கான பகிர்வுகள் உட்பட).

(2) 31.03.2012 இல் முடிவடையும் வருடத்துக்கான பங்காளர் மூலதன கணக்கு, நடைமுறைக் கணக்கு ஆகியன.

**(10 புள்ளிகள்)**

(ஆ) வரையறுத்த ரொசான் பொதுக்கம்பனியில் ஒன்றுசேர்த்தல், முடிவுறுத்தல் என்னும் இரண்டு உற்பத்தித் திணைக்களங்களும் ஒரு களஞ்சியசாலையும் உள்ளன. இக்கம்பனியானது 'சிறிய அளவு', 'பெரிய அளவு' என்னும் இரண்டு வகைப் பொம்மைகளை உற்பத்தி செய்கின்றது. இப்பொருட்கள் இவ்விரண்டு உற்பத்தி திணைக்களங்களிலும் செயன்முறைக்குட்படுத்தப்படுகின்றன. பின்வரும் தகவல்கள் தரப்பட்டுள்ளன.

| **மதிப்பிடப்பட்ட வருடாந்த மேந்தலைக் கிரயங்கள் :** | **ரூபா** |
|---|---|
| தொழிற்சாலை வாடகை | 120 000 |
| இயந்திரத்திற்கான பெறுமானத்தேய்வு | 80 000 |
| ஊழியர்களுக்கான காப்புறுதிக் கட்டணம் | 50 000 |
| நேரில் மூலப்பொருட்கள் - ஒன்றுசேர்த்தல் பகுதி | 106 000 |
| - முடிவுறுத்தல் பகுதி | 59 000 |
| - களஞ்சியம் | 11 000 |

**ஏனைய தொடர்புடைய தகவல்கள்:**

(i)

| | **ஒன்றுசேர்த்தல்** | **முடிவுறுத்தல்** | **களஞ்சியம்** |
|---|---|---|---|
| இயந்திரத்தின் கிரயம் (ரூபா) | 300 000 | 500 000 | – |
| தளப்பரப்பு (சதுர மீற்றர்) | 10 000 | 6 000 | 4 000 |
| ஊழியர்கள் எண்ணிக்கை | 60 | 30 | 10 |
| பாதிட்ட இயந்திர மணித்தியாலங்கள் | 5 000 | 2 000 | – |
| பாதிட்ட ஊழிய மணித்தியாலங்கள் | 2 000 | 8 000 | – |

(ii) ஒன்றுசேர்த்தல், முடிவுறுத்தல் பகுதிகளுக்கு முறையே 60%, 40% சேவையை களஞ்சியம் வழங்குகிறது.

(iii) மேந்தலைக் கிரயமானது பின்வரும் அடிப்படையில் உறுஞ்சப்படுகிறது:

ஒன்றுசேர்த்தல் பகுதி - இயந்திர மணித்தியாலங்கள்

முடிவுறுத்தல் பகுதி - ஊழிய மணித்தியாலங்கள்

(iv) அலகொன்றிற்காகத் தேவைப்படும் மணித்தியாலங்கள் (பெரியளவு பொம்மை):

இயந்திர மணித்தியாலங்கள் : ஒன்றுசேர்த்தல் பகுதி 4 மணித்தியாலங்கள்

ஊழிய மணித்தியாலங்கள் : முடிவுறுத்தல் பகுதி 5 மணித்தியாலங்கள்

(v) பெரியளவு பொம்மை ஒன்றை உற்பத்தி செய்வதற்கான உண்மையான நேர்க்கிரயங்கள் வருமாறு:

நேர் மூலப்பொருட்கள் ரூபா 100

நேர் ஊழியம் ரூபா 150

(vi) பெரியளவு பொம்மை ஒன்றின் விற்பனை விலை ரூபா 600.

**வேண்டப்படுவது :**

(1) பயன்படுத்தப்பட்ட பகிர்வு அடிப்படைகளைக் காட்டக்கூடியதான மேந்தலைப் பகுப்பாய்வு அட்டவணை (களஞ்சியத்தின் மேந்தலைக் கிரயங்களின் மீள் பகிர்வு உட்பட).

(2) பெரிய அளவு பொம்மை ஒன்றிற்கான உற்பத்திக் கிரயம்

(3) பெரிய அளவு 200 பொம்மைகள் விற்பனையிலிருந்தான இலாபம் அல்லது நட்டம்

**(10 புள்ளிகள்)**

**(மொத்தம் 20 புள்ளிகள்)**

02. (அ) (1)

பிரியா, ரமேஸ், சுதர்சன் பங்குடமை
2012.03.31 இல் முடிவடைந்த வருடத்திற்கான
வருமானக் கூற்று

(ரூ'000)

| | | | |
|---|---|---|---|
| ஆலோசனைக் கட்டண வருமானம் | | 1500 | (02) ← செய்கையை பார்க்குக |
| நிலையான வைப்பு வட்டி | | 30 | (01) |
| | | 1530 | |
| **கழி** | | | |
| காகிதாதிகள் | 250 (02) ← | | செய்கையை பார்க்குக |
| அலுவலக உத்தியோகத்தர் சம்பளம் | 140 | | |
| அலுவலகச் செலவுகள் | 350 (02) ← | | |
| ஆதனம், பொறி, உபகரண பெறுமானத்தேய்வு | 260 (01) | (1000) | |
| தேறிய இலாபம் | | 530 (01) | |
| சம்பளம் - பிரியா | 120 } (01) | | |
| ரமேஸ் | 120 | | |
| சுதர்சன் | 120 | (360) | |
| இலாபம் - பிரியா | 68 } (02) ← | | பெற்றத் தொகையினை சரியான விகிதத்தில் பிரித்திருந்தால் (01) |
| ரமேஸ் | 68 | | |
| சுதர்சன் | 34 | (170) | |

**(12 புள்ளிகள்)**

செய்கை (ரூ'000)

1. **ஆலோசனைக் கட்டணம்**

| | | |
|---|---|---|
| ஆலோசனைக் கட்டணம் கிடைத்தல் | 1300 | |
| 2011.03.31 திகதிக்கு கிடைக்க வேண்டியது | (300) | (01) |
| 2012.03.31 திகதிக்கு கிடைக்க வேண்டியது | 500 | (01) |
| | 1500 | |

2. **பாவித்த காகிதாதிகள்**

| | | |
|---|---|---|
| ஆரம்ப தொகை | 100 | } (01) |
| கொள்வனவு | 200 | |
| | 300 | |
| இறுதி தொகை | (50) | (01) |
| | 250 | |

3. **அலுவலகச் செலவுகள்**

| | | |
|---|---|---|
| பணமாகச் செலுத்தியது | 400 | } (01) |
| ஆரம்ப மீதி | (200) | |
| வருட இறுதி மீதி | 150 | (01) |
| | 350 | |

(அ) (2)

**பங்காளர் மூலதனக் கணக்கு**

(ரூ'000)

| | பிரியா | ரமேஸ் | சுதர்சன் | | பிரியா | ரமேஸ் | சுதர்சன் |
|---|---|---|---|---|---|---|---|
| * நன்மதிப்பு | 400 | 400 | 200 (01) | மீதி | 600 | 400 | - |
| மீ/கீ/கொ/செ | 800 | 400 | 200 (01) | காசு | - | - | 400 (01) |
| | | | | * நன்மதிப்பு | 600 | 400 | - (01) |
| | 1200 | 800 | 400 | | 1200 | 800 | 400 |
| | | | | மீ/கீ/கொ/வ | 800 | 400 | 200 |

* நன்மதிப்பின் தேறிய தாக்கத்தினையும் காட்டலாம்.

**பங்காளர் நடைமுறைக் கணக்கு**

(ரூ'000)

| | பிரியா | ரமேஸ் | சுதர்சன் | | பிரியா | ரமேஸ் | சுதர்சன் |
|---|---|---|---|---|---|---|---|
| பற்றுக்கள் | 125 | 110 | 105 (01) | மீதி | 150 | 150 | - |
| (01) | | | | சம்பளம் (01) | 120 | 120 | 120 |
| மீ/கீ/கொ/செ | 213 | 228 | 49 | இலாப்பகிர்வு (01) | 68 | 68 | 34 |
| | 338 | 338 | 154 | | 338 | 800 | 154 |
| | | | | மீ/கீ/கொ/வ | 213 | 228 | 49 |

* பெறுமதியினை பகிர்வின் அடிப்படையில் உரிய விகிதத்தில் பிரித்திருந்தால் மாத்திரம் புள்ளி வழங்கப்படும்.

**(08 புள்ளிகள்)**

(ஆ) (1) மேந்தலைப் பகுப்பாய்வு அட்டவணை

(ரூ'000)

| கிரய உருப்படி | பகிர்வின் அடிப்படை | மொத்தம் | ஒன்று சேகரித்தல் | முடிவுறுத்தல் | களஞ்சியம் |
|---|---|---|---|---|---|
| நேரில் மூலப்பொருட்கள் | ஒதுக்கீடு | 176 | 106 | 59 | 11 (01) |
| தொழிற்சாலை வாடகை | (01) தளப்பரப்பு/ (10:6:4) | 120 | 60 | 36 | 24 (01) |
| இயந்திர பெறுமானத்தேய்வு | (01) இயந்திரகிரயம்/ (3:5) | 80 | 30 | 50 | - (01) |
| ஊழியர்களுக்கான காப்புறுதி | (01) ஊழியர் எண்ணிக்கை/ (6:3:1) | 50 | 30 | 15 | 5 (01) |
| மொத்தம் | | 426 | 226 | 160 | 40 |
| களஞ்சியம் | 6:4 | | 24 (01) | 16 (01) | (40) |
| | | 426 | 250 | 176 | - |

(01)

( * பெறுமதியினை பகிர்வின் அடிப்படையில் உரிய விகிதத்தில் பிரித்திருந்தால் மாத்திரம் புள்ளி வழங்கப்படும்.)

**(10 புள்ளிகள்)**

(2) பொம்மை ஒன்றிற்கான உற்பத்திக் கிரயம் : ரூபா 560 **(07 புள்ளிகள்)**

செய்கை (ரூ.)

(1)

| | | | |
|---|---|---|---|
| நேர்மூலப் பொருள் | | = | 100 |
| நேர் ஊழியம் | | = | 150 |
| மூலக்கிரயம் | | = | 250 (01) |
| உறிஞ்சப்பட்ட மேந்தலை | | | |
| ஒன்று சேர்த்தல் பகுதி | 50 (02) × 4 (01) = 200 | | |
| முடிவுறுத்தல் பகுதி | 22 (02) × 5 (01) = 110 | = | 310 |
| உற்பத்திக் கிரயம் | | = | 560 |

(2) மேந்தலை உறிஞ்சல் வீதம் * = $\frac{250000}{5000}$ [01] [01] = ஒன்று சேர்த்தல் பகுதி ரூ. 50

மேந்தலை உறிஞ்சல் வீதம * = $\frac{176000}{8000}$ [01] [01] = முடிவுறுத்தல் பகுதி ரூ. 22

(3) பொம்மை விற்பனை இலாபம் = ரூ. 8000 **(03 புள்ளிகள்)**

செய்கை (ரூ.) :

| | | |
|---|---|---|
| விற்பனை வருமானம் (200 × 600) | = | 120000 (01) |
| உற்பத்திக் கிரயம் (200 × 560) | = | (112000) (01) |
| இலாபம் | = | 8000 |

மாற்றுவிடை : 200 x 40 (01) = 8000

**2 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவுக்காக ஒதுக்கப்பட்ட புள்ளி 20 X 2 = 40 புள்ளிகளாகும்.
2 ஆம் வினா கட்டாய வினாவாக அமைந்தாலும் 96% இத்தினரே இதற்கு விடையளித்துள்ளனர். இவ்வினாவிற்கான மொத்தப்புள்ளிகள் 40 ஆகும்.
இதில் 00 - 10 ஆயிடையில் 26%
11 - 20 ஆயிடையில் 22%
21 - 30 ஆயிடையில் 23%
31 - 40 ஆயிடையில் 29%
ஆனோர் புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.
இவ்வினாவுக்கு 31 புள்ளிகளுக்கு மேல் பெற்றுக்கொண்டோர் 29% இத்தினர் ஆவதோடு, 29% இத்தினர் 10 இற்கும் குறைவான புள்ளிகளையேப் பெற்றுள்ளனர்.




இவ் வினாவில் 5 உப பிரிவுகள் உள்ளதோடு அவ் உபபிரிவுகள் 5 இனதும் இலகுத்தன்மை 45% இத்திற்கும் கூடுதலாகும். இலகுத்தன்மைக் கூடிய உப பிரிவாக (ஆ) (1) உள்ளதோடு அதன் இலகுத்தன்மை 74% ஆகும். இலகுத்தன்மைக் குறைவான உபபிரிவாக (அ) (1) உள்ளது. இதன் இலகுத்தன்மை 48% ஆகும்.

2 ஆம் வினாவின் (அ) I, (ஆ) (3) போன்ற பகுதிகளின் இலகுத்தன்மை முறையே 48% மும் 66% மும் ஆகும். நிறுவனம் சேவை வழங்கும் பங்குடமை என்பதை விளங்கிக் கொள்ளாமையினால், எழுது பொருட்களின் இருப்பினை, வியாபார இருப்பாக இனம் கண்டு வருமானக் கூற்றைத் தயாரித்தல், ஆலோசனை வருமானங்களை அட்டுறு எண்ணக்கருவிற்கேற்ப சரியாக சீராக்காமை போன்ற பலவீனங்கள் இடம்பெற்றுள்ளன. விற்பனை நிறுவனமொன்றின் வருமானக் கூற்றிற்கும், சேவைகளை வழங்கும் நிறுவனமொன்றின் வருமானக் கூற்றிற்கும் இடையில் வேறுபாடுகள் காணப்படுகின்றன என்பது விளங்கும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகள் ஒழுங்குபடுத்தப்படல் வேண்டும். அட்டுறு எண்ணகருவிற்கேற்ப வருடத்திற்குரிய வருமானங்கள், வருடத்திற்குரிய செலவுகள் என்பவற்றை கணித்தல் தொடர்பிலான விளக்கமொன்றினைப் பெற்றுக் கொடுக்கக் கூடியவாறு மாணவர்களுக்கு கற்பித்தல்கள் மேற் கொள்ளப்படல் வேண்டும்.

(ஆ) (2), (ஆ) (3) பகுதிகளின் இலகுத்தன்மை முறையே 59% உம் 50% உம் ஆகும். பொது மேந்தலைக்கிரயத்தின் உள்ளடக்கல் வீதத்தினைக் கணிப்பதில் விளக்கமின்மை, மொத்தக் கிரயத்தினைக் கணிக்கும் போது பொது மேந்தலைக் கிரயத்தினை உள்ளடக்குதல் என்பவை தொடர்பிலான விளக்கம், குறைவாக இருத்தலும் இலாபம் / நட்டத்தினை கணித்தல் பலவீனமான மட்டத்தில் காணப்படுகின்றமையும் இதற்கான காரணங்களாக அமையலாம். பொது மேந்தலைக் கிரய உள்ளடக்கல் விகிதம், பொது மேந்தலைக் கிரயத்தினை உள்ளடக்கல் என்பன தொடர்பில் குறைந்த அடைவு மட்டம் காணப்படுகின்றமையால், பொது மேந்தலைக் கிரயத்தினை பகிர்வு செய்வதும் உள்ளடக்குவதும் தொடர்பிலான விளக்கத்தினை உறுதிப்படுத்தும் வகையில் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகள் ஒழுங்கமைக்கப்படல் வேண்டும்.

## வினா இலக்கம் - 03

**3.** (அ) வியாபாரமொன்றின் காசுப் புத்தகமானது 31.03.2012 இல் ரூபா 20 000 வங்கி வரவு மீதியைக் காட்டியது. இத்தினத்தில் வங்கிக் கூற்றானது ரூபா 10 000 மேலதிகப்பற்று மீதியைக் காட்டியது. இதனைத் தொடர்ந்து பரிசீலனை செய்தபோது பின்வரும் தகவல்கள் வெளிக்கொணரப்பட்டன.

(i) வங்கியில் வைப்பிலிடப்பட்ட ரூபா 80 000 காசோலைகள் இன்னமும் வசூலிக்கப்படவில்லை.

(ii) வழங்குனர்களுக்குக் கொடுத்த ரூபா 40 000 காசோலைகள் இன்னமும் வங்கியில் கொடுப்பனவுகளுக்காகச் சமர்ப்பிக்கப்படவில்லை.

(iii) நேரடியாக வங்கியில் இடப்பட்ட நிலையான வைப்பின் மீதான வட்டி ரூபா 25 000 ஆனது காசுப் புத்தகத்தில் பதியப்பட்டிருக்கவில்லை.

(iv) நிலையான கட்டளையின் பேரில் வங்கியினால் செலுத்திய ரூபா 5 000 காப்புறுதிக் கட்டணமானது காசுப் புத்தகத்தில் பதியப்பட்டிருக்கவில்லை.

(v) வைப்பிலிடப்பட்ட ரூபா 10 000 காசோலையொன்று வங்கியினால் மறுக்கப்பட்டுள்ளது. எனினும் காசுப் புத்தகத்தில் இது பதியப்பட்டிருக்கவில்லை.

**வேண்டப்படுவது :**

(1) 31.03.2012 இல் உள்ளவாறான காசுப் புத்தகத்தின் சீராக்கிய மீதி

(2) மார்ச் 2012 மாதத்திற்கான வங்கி இணக்கக் கூற்று **(05 புள்ளிகள்)**

(ஆ) தனி உரிமையாளரான **டிலானி** ரேடர்ஸ் இன் 01.01.2012 இல் உள்ளவாறான ஐந்தொகை கீழே தரப்பட்டுள்ளது.

**01.01.2012 இல் உள்ளவாறான ஐந்தொகை**

| | ரூபா '000 |
|---|---|
| **சொத்துக்கள்** | |
| தளவாடம், பொருத்துக்கள் (கிரயம் ரூபா 180 000) | 120 |
| சரக்கிருப்புக்கள் | 70 |
| கடன்பட்டோர் | 10 |
| காசு | 30 |
| | **230** |
| **உரிமையாண்மை** | 180 |
| **பொறுப்புக்கள்** | |
| கடன்கொடுத்தோர் | 50 |
| | **230** |

2012 ஜனவரி மாதத்தில் பின்வரும் கொடுக்கல் வாங்கல்களும், நிகழ்வுகளும் இடம்பெற்றுள்ளன.

| இலக்கம் | திகதி ஜனவரி | கொடுக்கல் வாங்கல்களும், நிகழ்வுகளும் |
|---|---|---|
| (i) | 04 | ரூபா 40 000 இற்கு பொருட்கள் காசுக்கு விற்கப்பட்டது. இப்பொருட்களின் கிரயம் ரூபா 30 000 ஆகும். |
| (ii) | 08 | ரூபா 35 000 பெறுமதியான பொருட்கள் கடனுக்கு கொள்வனவு செய்யப்பட்டன. |

| | | |
|---|---|---|
| (iii) | 12 | 08.01.2012 இல் கொள்வனவு செய்யப்பட்ட பொருட்களில் ரூபா 5 000 பெறுமதியானவை விநியோகஸ்தருக்குத் திருப்பியனுப்பப்பட்டன. |
| (iv) | 15 | ரூபா 50 000 இற்கு பொருட்கள் கடனுக்கு விற்கப்பட்டன. இப்பொருட்களின் கிரயம் ரூபா 40 000 ஆகும். |
| (v) | 18 | கடன்பட்டோரிடமிருந்து ரூபா 9 000 காசு பெறப்பட்டது. மேலும் ரூபா 1 000 அறிவிடமுடியாக்கடனாகப் பதிவழிக்கப்பட்டது. |
| (vi) | 20 | ஊழியர்களுக்கான சம்பளமாக ரூபா 12 000 செலுத்தப்பட்டது. |
| (vii) | 25 | 01.01.2012 இலுள்ள கடன்கொடுத்தோர் மீதியானது ரூபா 5 000 காசுக் கழிவுடன் காசாகக் கொடுத்துத் தீர்க்கப்பட்டது. |
| (viii) | 28 | சொந்தத் தேவைக்காக உரிமையாளர் காசாக ரூபா 5 000 ஐப் பற்றியுள்ளார். |
| (ix) | 30 | 18.01.2012 இல் அறவிடமுடியாக் கடனாகப் பதிவழித்த தொகையானது காசாகப் பெறப்பட்டது. |
| (x) | 31 | ஜனவரி மாதத்திற்கான தளவாடம், பொருத்துகளுக்கு பெறுமானத்தேய்வாக ரூபா 3 000 செய்யப்பட்டது. |

**வேண்டப்படுவது:**

(1) கணக்கீட்டுச் சமன்பாட்டினைப் பயன்படுத்தி மேற்படி கொடுக்கல் வாங்கல்கள் மற்றும் நிகழ்வுகள் என்பவற்றின் விளைவுகளை அதன் பெறுமதியுடன் காட்டுக. மேலும் இப்பெறுமதியானது அதிகரித்திருப்பின் (+) எனவும் குறைவடைந்திருப்பின் (–) எனவும் பெறுமதியின் முன் குறிப்பிட்டுக் காட்டுக. (கீழே தரப்பட்டுள்ள மாதிரி அமைப்பினைப் பயன்படுத்துக).

| இலக்கம் | சொத்துக்கள் | | | | பொறுப்புக்கள் | உரிமையாண்மை |
|---|---|---|---|---|---|---|
| | தளபாடங்கள் பொருத்துக்கள் | இருப்புக்கள் | கடன்பட்டோர் | காசு | கடன்கொடுத்தோர் | |
| (i)<br>(ii)<br>.....<br>..... | | | | | | |

(2) ஜனவரி 2012 மாதத்திற்கான தேறிய இலாபம் அல்லது நட்டத்தைக் கணிக்குக. **10 புள்ளிகள்)**

**(மொத்தம் 15 புள்ளிகள்)**

03 ஆம் வினா

03. (அ) (1) 2012.03.31 ஆம் திகதிக்கு சீராக்கிய காசேட்டு மீதி = ரூ 30000 **(04 புள்ளிகள்)**

செய்கை (ரூ'000) :

சீராக்கிய காசேடு

| | | | | |
|---|---|---|---|---|
| மீதி | 20 (01) | | காப்புறுதிக் கட்டணம் | 5 (01) |
| நிலையான வைப்பு வட்டி | 25 (01) | | மறுக்கப்பட்ட காசோலை | 10 (01) |
| | | | மீ/கீ/கொ/செ | 30 |
| | 45 | | | 45 |
| மீ/கீ/கொ/வ | 30 | | | |

(அ) (2)

மார்ச் 2012 மாதத்திற்கான வங்கி இணக்கக் கூற்று

(ரூ'000)

| | | |
|---|---|---|
| சீராக்கிய காசேட்டு வங்கி மீதி (01) | 30 | |
| கூட்டல் :- | | |
| மாற்றப்படாத காசோலை | 40 | (02) |
| | 70 | |
| கழித்தல் :- | | |
| வசூலிக்கப்படாத காசோலை | (80) | (02) |
| 31/03/2012ல் வங்கிக் கூற்றுப்படி மேலதிகப் பற்று மீதி | (10) | (01) |

**(06 புள்ளிகள்)**

(ஆ) (1)

(ரூ'000)

| இலக்கம் | சொத்துக்கள் | | | | பொறுப்புக்கள் | உரிமையாண்மை | |
|---|---|---|---|---|---|---|---|
| | தளபாடங்கள் சொத்துக்கள் | இருப்புக்கள் | கடன் பட்டோர் | காசு | கடன் கொடுத்தோர் | | |
| ஆரம்ப மீதி | 120 | 70 | 10 | 30 | 50 | 180 | |
| (i) | | -30 | | +40 | | +10 | (02) |
| (ii) | | +35 | | | +35 (01) | | |
| (iii) | | -5 | | | -5 (01) | | |
| (iv) | | -40 | +50 | | | +10 | (02) |
| (v) | | | -10 | +9 | | -1 | (02) |
| (vi) | | | | -12 | | -12 | (01) |
| (vii) | | | | -45 | -50 | +5 | (02) |
| (viii) | | | | -5 | | -5 | (01) |
| (ix) | | | | +1 | | +1 | (01) |
| (x) | -3 | | | | | -3 | (01) |
| இறுதி மிகுதி | 117 | 30 | 50 | 18 | 30 | 185 | |

**(14 புள்ளிகள்)**

(2) தேறிய இலாபம் 10000 **(06 புள்ளிகள்)**

செய்கை (ரூ.) : 185000 (03) - 180000 (01) + 5000 (02)

= 10000

**3 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவுக்காக ஒதுக்கப்பட்ட புள்ளி 15 X 2 = 30 புள்ளிகளாகும்.
3 ஆம் வினாவினை 93% இத்தினரே தேர்ந்தெடுத்துள்ளனர்.
இவ்வினாவிற்கான மொத்தப்புள்ளிகள் 30 ஆகும்.
இதில் 00 - 7 ஆயிடையில் 8%
08 - 15 ஆயிடையில் 17%
16 - 23 ஆயிடையில் 26%
24 - 30 ஆயிடையில் 49%
ஆனோர் புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.
இவ்வினாவுக்கு 24 அல்லது அதற்கும் குறைவான புள்ளிகளை 49% இத்தினர் பெற்றுள்ளதோடு 8% இத்தினர் 07 அல்லது அதற்கும் குறைவான புள்ளிகளையேப் பெற்றுள்ளனர்.




இவ்வினாவில் 4 உப பிரிவுகள் உள்ளதோடு அதில் கூடிய இலகுத்தன்மையைக் கொண்ட பிரிவாக (அ) (1) உள்ளதோடு அதன் இலகுத்தன்மை 93% ஆகும். அத்தோடு இலகுத்தன்மைக் குறைந்த உபபிரிவாக (ஆ) (2) உள்ளதோடு இதன் இலகுத்தன்மை 52% ஆகும்.

(அ) (1), (அ) (2) உபபகுதிகளுக்கான இலகுதன்மை முறையே 93% உம் 87% உம் ஆகும். இந்த உபபகுதி தொடர்பில் மாணவர்கள் உயர் இலகுதன்மையினைக் காட்டியுள்ளனர். (தேறிய சொத்துக்களின் அடிப்படையில் இலாபம் / நட்டத்தினைக் கண்டுபிடிப்பது பலவீனமான இருப்பதைக் காணக்கூடியதாயுள்ளது. வருமானக் கூற்றின் உதவியுடன் மாத்திரமன்றி தேறிய சொத்துக்களின் அடிப்படையிலும் தேறிய இலாபம் / நட்டத்தினை கண்டு பிடிக்கலாம் என்பதனால், மேற்குறிப்பிட்ட இரு துறைகள் தொடர்பாகவும் கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டின் போது மாணவர்களுக்கு விளக்கத்தினைப் பெற்றுக் கொடுத்தல் வேண்டும்.)

(ஆ) (2) உபபகுதி தொடர்பிலான இலகுதன்மை 52% ஆகும். அத்துடன் இந்த உபபகுதியினை மாணவர்கள் தவிர்த்திருக்காமல் அல்லது கைவிடாமல் இருந்திருந்தால் மாணவர்களின் அடைவு மட்டம் இன்னும் உயர்வடைந்திருக்கும். அதனால் வினாப்பத்திரத்தில் சகல உபபகுதிகளையும் வாசித்து விளங்கி விடையளிப்பதற்கு மாணவர்களைப் பழக்குதல் வேண்டும்.

## வினா இலக்கம் - 04

**4. (அ)** பின்வருவன வரையறுத்த ஷிமானுஜான் பொதுக்கம்பனியின் 31.03.2011 இல் உள்ளவாறான ஆதனம். பொறி மற்றும் உபகரணங்கள் ஆகியவற்றின் இரண்டு உருப்படிகள் தொடர்பான தகவல்களாகும்.

| **சொத்துக்கள்** | **கிரயம் (ரூபா '000)** | **கொண்டுசெல் மீதி (ரூபா '000)** | **மதிப்பிடப்பட்ட பயன்தரு வாழ்வுக்காலம் (வருடங்கள்)** |
|---|---|---|---|
| கட்டிடங்கள் | 2 000 | 1 000 | 20 |
| அலுவலக உபகரணங்கள் | 500 | 400 | 5 |

இச்சொத்துக்கள் நேர்கோட்டு முறையில் கிரயத்தில் பெறுமானத்தேய்விடப்படுகிறது. (அவைகளின் எஞ்சிய பெறுமதியைப் புறக்கணிக்குக).

இச்சொத்துகள் தொடர்பில் 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் பின்வரும் கொடுக்கல் வாங்கல்கள்/ நிகழ்வுகள் இடம்பெற்றுள்ளன.

| **திகதி** | **கொடுக்கல் வாங்கல்கள் / நிகழ்வுகள்** |
|---|---|
| 01.04.2011 | கட்டிடமானது ரூபா 800 000 செலவில் நவீனமயப்படுத்தப்பட்டுள்ளது. இதன் காரணமாக கட்டிடத்தின் மிகுதியாகவுள்ள பயன்தரு வாழ்வுக்காலமானது 15 வருடங்களாக மீள் மதிப்பிடப்பட்டுள்ளது. |
| 31.03.2012 | ஏற்கனவேயுள்ள அலுவலக உபகரணத்தைப் பரிமாற்றம் செய்தும் மேலும் ரூபா 300 000 ஐ காசாகச் செலுத்தியும் புதிய நவீன அலுவலக உபகரணம் ரூபா 600 000 இற்குப் பெறப்பட்டது. புதிய நவீன உபகரணத்தின் எதிர்பார்க்கப்படும் பயன்தரு வாழ்வுக்காலம் 5 வருடங்களாகும். |

**வேண்டப்படுவது :**

(1) மேற்படி கொடுக்கல் வாங்கல்கள், நிகழ்வுகளுக்கான நாட்குறிப்புப் பதிவுகள் (காசு உட்பட)

(2) மேற்படி கொடுக்கல் வாங்கல்கள்/நிகழ்வுகளினால் 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்திற்கான இலாபத்தின் மீதான தாக்கம் **(05 புள்ளிகள்)**

**(ஆ)** **அற்புதன், கமலன், அகிலன்** ஆகியோர் கம்பனியொன்றின் மூன்று ஊழியர்கள். இவர்களின் சம்பளம் தொடர்பான பின்வரும் தகவல்கள் 2012 மார்ச் மாதத்திற்காகத் தரப்பட்டுள்ளது.

(i) வேலை செய்த மணித்தியாலங்கள் :

| **ஊழியன்** | **வார நாட்கள்** | **வார இறுதி நாட்கள்** |
|---|---|---|
| அற்புதன் | 40 | - |
| கமலன் | 40 | 10 |
| அகிலன் | 40 | 20 |

(ii) மணித்தியால வீதங்கள்:

- வார நாட்களுக்கான வீதம் - மணித்தியாலத்திற்கு ரூபா 200 வீதம்
- வார இறுதி நாட்களுக்கான மேலதிக நேர வீதம் - வாரநாட்களின் வீதத்தின் ஒன்றரை மடங்கு

(iii) வேலை கொள்வோர், ஊழியர் என்போரால் ஊழியர் சேமலாப நிதிப் (EPF) பங்களிப்புகள் முறையே 15%, 10% ஆகும்.
வேலை கொள்வோரால் ஊழியர் நம்பிக்கை நிதிப் (ETF) பங்களிப்பு 3% ஆகும். EPF, ETF என்பவற்றைக் கணிப்பிடுவதற்கு மேலதிக நேரக் கொடுப்பனவுகள் உரித்துடையவையல்ல.

(iv) கழிப்பனவுகள் :

- நலன்புரிச் சங்கத்திற்கு ஊழியர்களின் மாதாந்தப் பங்களிப்பு - ரூபா 200 (ஊழியன் ஒருவனுக்கு).
- அகிலனின் மாதாந்த கடன் தவணைக் கொடுப்பனவு - ரூபா 4 000.

**வேண்டப்படுவது:**

(1) 2012 மார்ச் மாதத்திற்கான சம்பளப் பட்டியல்

(2) 2012 மார்ச் மாதத்திற்கான சம்பளக் கட்டுப்பாட்டுக் கணக்கு, செலுத்தப்பட வேண்டிய ஊழியர் சேமலாப நிதி (EPF) கணக்கு, ஊழியர் நம்பிக்கை நிதி (ETF) கணக்கு

(3) 2012 மார்ச் மாதத்திற்கான ஊழியர்கள் தொடர்பான மொத்தச் செலவுகள்

**(10 புள்ளிகள்)**

**(மொத்தம் 15 புள்ளிகள்)**

**விடை**

04. (அ) (1)  நாட்குறிப்பு

(ரூ'000)

| விபரம் | வரவு | செலவு |
|---|---|---|
| கட்டிட கணக்கு<br>காசுக் கணக்கு<br>(கட்டிட நவீன மாக்குதல் செலவு) | 800 | 800 (01) |
| ட்டிட பெறுமானத்தேய்வு கணக்கு<br>கட்டிட பெறுமானத்தேய்வு ஏற்பாட்டு கணக்கு<br>(கட்டிடங்களுக்கு நேர்கோட்டுமுறையில் பெறுமானத்தேய்வு செய்யப்பட்டது) | 120 | 120 (02) |
| அலுவலக உபகரண பரிமாற்றல் கணக்கு<br>அலுவலக உபகரண கணக்கு<br>(பரிமாற்றல் கணக்கிற்கு மாற்றப்பட்ட அலுவலக உபகரணத்தின் கிரயம்) | 500 | 500 (01) |
| அலுவலக உபகரண பெறுமானத்தேய்வு கணக்கு<br>அலுவலக உபகரண பெறுமானத்தேய்வு ஏற்பாடு<br>(அலுவலக உபகரணத்திற்கான இவ்வாண்டு பெறுமானத்தேய்வு) | 100 | 100 (01) |
| அலுவலக உபகரண பெறுமானத்தேய்வு ஏற்பாடு<br>அலுவலக உபகரண பரிமாற்றல் கணக்கு<br>(பரிமாற்றம் செய்யப்பட்ட அலுவலக உபகரணத்தின் திரண்ட பெறுமானத்தேய்வு) | 200 | 200 (01) |
| அலுவலக உபகரண மாற்றல் கணக்கு<br>காசுக் கணக்கு<br>அலுவலக உபகரண பரிமாற்றல் கணக்கு<br>(பரிமாற்றத்திற்கென மேலதிகமாகச் செலுத்திய காசு) | 600 | 300<br>300 (02) |

விளம்பல் எழுதாவிடின் 02 புள்ளிகள் குறைக்கவும்.

**(08 புள்ளிகள்)**

(அ) (2)  ரூ 220,000/120,000  **(02 புள்ளிகள்)**

| செய்கை (ரூ.) : | | |
|---|---|---|
| கட்டிடம் | 120,000/20,000 | (01) |
| அலுவலக உபகரணம் | 100,000/100,000 | (01) |
| | 220,000/120,000 | |

(ஆ)(1) 2012 மார்ச் மாதத்திற்கான சம்பளப்பட்டியல்

(ரூ)

| தொ. இல | ஊழியர் பெயர் | அடிப்படை சம்பளம் | மேலதிக நேரக் கொடுப்பனவு | மொத்த சம்பளம் | கழிப்பனவுகள் | | | மொத்தக் கழிப்பனவு | தேறிய சம்பளம் | தொழில் கொள்வோர் | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | EPF | நலன்புரிச் சங்கம் | கடன் தவணை | | | EPF | ETF |
| 01 | அற்புதன் | 8000 | - | 8000 | 800 | 200 | - | 1000 | 7000 (01) | 1200 | 240 |
| 02 | கமலன் | 8000 | 3000 (01) | 11000 | 800 (01) | 200 | - | 1000 | 10000 (01) | 1200 (01) | 240 (01) |
| 03 | அகிலன் | 8000 | 6000 (01) | 14000 | 800 | 200 | 4000 | 5000 | 9000 (01) | 1200 | 240 |
| | | 24000 | 9000 | 33000 | 24000 | 600 | 4000 | 7000 | 26000 | 3600 | 720 |

(02)

**(10 புள்ளிகள்)**

(2)

சம்பளக்கட்டுப்பாட்டுக் கணக்கு

| | | | |
|---|---|---|---|
| EPF | 2400 (01) | சம்பளம் | 33000 (01) |
| நலன்புரிச் சங்கம் | 600 (01) | | |
| கடன் தவணை | 4000 (01) | | |
| காசு/ வங்கி/ செ.வே.ச | 26000 (01) | | |
| | 33000 | | 33000 |

செலுத்தவேண்டிய ஊழியர் சேமலாப நிதி கணக்கு

| | | | |
|---|---|---|---|
| மீ/கீ/கொ/செ | 6000 | சம்பளக்கட்டுப்பாட்டுக் கணக்கு | 2400 (01) |
| | | EPF செலவு | 3600 (01) |
| | 6000 | | 6000 |
| | | மீ/கீ/கொ/வ | 6000 |

செலுத்தவேண்டிய ஊழியர் நம்பிக்கை நிதிக் கணக்கு

| | | | |
|---|---|---|---|
| மீ/கீ/கொ/செ | 720 | EPF செலவு | 720 (01) |
| | | மீ/கீ/கொ/வ | 720 |

**(08 புள்ளிகள்)**

(3) ஊழியர் தொடர்பான மொத்தச் செலவு ரூ. 37320 (02)

செய்கை (ரூ.) :

| | |
|---|---|
| ஊழியர் சம்பளம் | 33000 |
| ஊழியர் சேமலாப நிதிச் செலவு | 3600 (01) |
| ஊழியர் நம்பிக்கை நிதிச் செலவு | 720 (01) |
| ஊழியர் தொடர்பான மொத்தச் செலவுகள் | 37320 |

மாற்று விடை

(ஆ) (1)

| ஊழியர் பெயர் | கொடுப்பனவுகள் | | | கழிப்பனவுகள் | | | தேறிய சம்பளம் | தொழில் கொள்வோர் | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | அடிப்படை சம்பளம் | மேலதிக நேரக் கொடுப்பனவு | மொத்த சம்பளம் | EPF | நலன்புரிச் சங்கம் | கடன் | | EPF | ETF |
| அற்புதன் | 32000 | - | 32000 | 3200 | 200 | - | 28600 (01) | 4800 | 960 |
| கமலன் | 32000 | 12000 (01) | 44000 | 3200 (01) | 200 | - | 40600 (01) | 4800 (01) | 960 (01) |
| அகிலன் | 32000 | 24000 (01) | 56000 | 3200 | 200 | 4000 | 48600 (01) | 4800 | 960 |
| | 96000 | 36000 | 132000 | 9600 | 600 | 4000 | 117800 | 14400 | 2880 |

(02)

**(10 புள்ளிகள்)**

(2) சம்பளக்கட்டுப்பாட்டுக் கணக்கு

| | | | |
|---|---|---|---|
| EPF | 9600 (01) | சம்பளம் | 132000 (01) |
| நலன்புரிச் சங்கம் | 600 (01) | | |
| கடன் | 4000 (01) | | |
| காசு/ வங்கி/ செ.வே.ச | 117800 (01) | | |
| | 126000 | | 126000 |

செலுத்தவேண்டிய ஊழியர் சேமலாப நிதி கணக்கு

| | | | |
|---|---|---|---|
| மீ/கீ/கொ/செ | 24000 | சம்பளக்கட்டுப்பாட்டுக் கணக்கு | 9600 (01) |
| | | EPF செலவு | 14400 (01) |
| | 24000 | | 24000 |
| | | மீ/கீ/கொ/வ | 24000 |

செலுத்தவேண்டிய ஊழியர் நம்பிக்கை நிதிக் கணக்கு

| | | | |
|---|---|---|---|
| மீ/கீ/கொ/செ | 2880 | EPF செலவு | 2880 (01) |
| மீ/கீ/கொ/வ | 2880 | | |

**(08 புள்ளிகள்)**

(3) ஊழியர் தொடர்பான மொத்தச் செலவுகள் - ரூ. 149280 (02)

செய்கை : (ரூ.)

| | |
|---|---|
| ஊழியர் சம்பளம் | 132000 |
| EPF | 14400 (01) |
| ETF | 2880 (01) |
| | 149280 |

**(02 புள்ளிகள்)**

**4 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவுக்காக ஒதுக்கப்பட்ட புள்ளி 15 X 2 = 30 புள்ளிகளாகும்.
4 ஆம் வினாவினை 75% ஆன விண்ணப்பதாரிகள் தேர்ந்தெடுத்துள்ளனர். இவ் வினாவிற்கான மொத்தப்புள்ளிகள் 30 ஆகும்.

இதில் 00 - 7 ஆயிடையில் 34%
08 - 15 ஆயிடையில் 25%
16 - 23 ஆயிடையில் 22%
24 - 30 ஆயிடையில் 19%

ஆனோர் புள்ளிகளைப் பெற்றுள்ளனர். இவ்வினாவில் 24 புள்ளிகள் அல்லது அதற்கு மேற்பட்டப் புள்ளிகளைப் பெற்றோர் 19% ஆக இருந்ததுடன் 7 அல்லது அதற்கும் குறைவானப் புள்ளிகளைப் பெற்றோரின் எண்ணிக்கை 34% ஆகும்.




இவ்வினாவில் 5 உப பிரிவுகள் உள்ளதோடு அதில் 3 உபபிரிவுகளின் இலகுத்தன்மையை 45% இற்கும் கூடுதலாகும். குறைந்தளவு இலகுத்தன்மையினைக் கொண்ட உபபிரிவாக (அ) (2) உள்ளதோடு அதன் இலகுத்தன்மை 34% ஆகும். இலகுத்தன்மைக் குறைந்த உபபிரிவாக (ஆ) (1) உள்ளதோடு அதன் இலகுத்தன்மை 57% ஆகும்.

(அ) (1) உபபகுதிக்கான இலகுதன்மை 36% ஆகும். கட்டடம் தொடர்பில் எதிர்காலத்திற்கு மேற்கொள்ளப்பட்ட நவீனமயமாக்குதல் செலவானது சொத்தின் பெறுமதி அதிகரிப்பொன்றாக மாணவர்கள் இனம் காணாமையும், கூடுதலான மாணவர்கள் அதனை கட்டடப் புதுப்பித்தல் செலவொன்றாக இனம் கண்டிருந்தமையையும் இங்கு காணக்கூடியதாகயிருந்தது. மேற்குறிப்பிட்ட எண்ணக்கரு சரியாக காணப்படாமையினால் வருடாந்தத் தேய்வு சரியாகக் கணிப்பிடப்பட்டிருந்தது. வினாவினை சரியாக வாசித்து விளங்குவதுடன், கற்றல் - கற்பித்தல் செயற்பாட்டினூடாக சரியான எண்ணக்கருக்களை மாணவர்களுக்கு விளக்குதலும் வேண்டும்.

(அ) (2) உபபகுதிக்கான இலகுத்தன்மை 34% ஆகும். இலாபத்தில் ஏற்பட்ட தாக்கத்தினைச் சரியாகக் கணிக்காமையே இலகுதன்மை குறைந்தமைக்கான காரணமாகும். LKAS 16 இற்கேற்ப பிற்காலத்திற்கு மேற் கொள்ளப்பட்ட கிரயங்கள் குறித்த சொத்தின் கிரயத்தின் பகுதியொன்றாக இனம் காணப்படல் வேண்டும் என்ற விளக்கத்தை கற்றல் - கற்பித்தல் செயன்முறையினூடாகப் பெற்றுக் கொடுத்தல் வேண்டும். பிற்காலத்திற்கான கிரயங்கள் சரியாக இனம் காணப்படாமையினால் வருடாந்த தேறிய இலாபத்தை சரியாகக் கணிப்பதில் ஏற்படும் தாக்கத்தினை விளக்குதல் வேண்டும்.

(ஆ) (3) உபபகுதிக்கான இலகுதன்மை 47% ஆகும். 2012 மார்ச் மாதத்திற்குரிய ஊழியர்கள் தொடர்பான மொத்தச் செலவினைக் கணிப்பீடும் போது சம்பளம் என்ற செலவினை மாத்திரம் மாணவர்கள் எடுத்திருந்ததுடன், E.P.F, E.T.F போன்ற செலவுகளை அவற்றுடன் சேர்க்காதிருந்தமையை காணக்கூடியதாகவிருந்தது. ஊழியர்களுக்குரிய மொத்தச் சம்பளத்தினை கணிப்பிடும் போது சம்பளம் என்ற செலவினை மாத்திரமன்றி வணிகம் அவர்கள் சார்பில் சம்பளத்திற்கு மேலதிகமாக ஏற்பட்ட ஏனைய செலவுகளையும் சேர்த்தல் வேண்டும் என்பதை அவர்களுக்கு தெளிவு படுத்துதல் வேண்டும்.

## வினா இலக்கம் - 05

5. (அ) வரையறுத்த மத்தியூஸ் பொதுக்கம்பனியின் 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்துக்கான நிதிக் கூற்றுக்களிலிருந்து பின்வரும் தகவல்கள் பெயர்த்தெடுக்கப்பட்டுள்ளன.

| | ரூபா '000 |
|---|---|
| கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | 600 |
| நிறுத்திவைத்த வருவாய்கள் | 400 |
| 15% தொகுதிக்கடன்கள் | 500 |
| நடைமுறைப் பொறுப்புக்கள் | 300 |
| நடைமுறையல்லா சொத்துக்கள் | 1 250 |
| **நடைமுறைச் சொத்துக்கள்:** | |
| சரக்கிருப்பு | 300 |
| (01.04.2011 இலுள்ளவாறான சரக்கிருப்பு ரூபா 500 000) | |
| கடன்பட்டோர் | 400 |
| காசும் காசுக்கு சமமானவைகளும் | 50 |
| விற்பனைகள் | 3 000 |
| விற்பனைக் கிரயம் | 2 200 |
| வருடத்துக்கான வருமானவரி | 200 |
| வருடத்துக்கான இலாபம் | 400 |

**வேண்டப்படுவது:**

(1) விரைவு விகிதம்
(2) சரக்கிருப்பு புரள்வு விகிதம்
(3) மொத்தச் சொத்துக்கள் மீதான வருவாய் விகிதம்
(4) கடன் - உரிமையாண்மை விகிதம்
(5) வட்டிக்காப்பு விகிதம்

(05 புள்ளிகள்)

(ஆ) வரையறுத்த உவைஸ் பொதுக்கம்பனியின் 31.03.2012, 31.03.2011 இலுள்ளபடியான ஐந்தொகைகளின் சுருக்கம் வருமாறு:

| | 31.03.2012 (ரூபா '000) | 31.03.2011 (ரூபா '000) |
|---|---|---|
| நிலம் | 1 250 | 1 600 |
| கட்டடங்கள் | 250 | 150 |
| திரண்ட பெறுமானத்தேய்வு - கட்டடங்கள் | (115) | (90) |
| பொறியும் இயந்திரங்களும் | 400 | 400 |
| திரண்ட பெறுமானத்தேய்வு - பொறியும் இயந்திரங்களும் | (120) | (80) |
| சரக்கிருப்பு | 125 | 150 |
| கடன்பட்டோர் | 750 | 600 |
| வங்கியிலுள்ள காசு | 100 | 70 |
| **மொத்தம்** | **2 640** | **2 800** |
| | | |
| கூறப்பட்ட சாதாரண பங்கு மூலதனம் | 800 | 800 |
| நிறுத்திவைத்த வருவாய்கள் | 480 | 300 |
| நீண்டகாலக் கடன் (31.03.2011 இல் பெறப்பட்டது) | 800 | 1 000 |
| கடன்கொடுத்தோர் | 450 | 620 |
| சென்மதி வட்டி | 60 | - |
| சென்மதி வருமானவரி | 50 | 80 |
| **மொத்தம்** | **2 640** | **2 800** |

**மேலதிகத் தகவல்கள் :**

(i) 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்துக்கான வருமானவரிக்கு முன்னதான இலாபம் ரூபா 200 000 ஆகும்.

(ii) 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்திற்கான செலுத்த வேண்டிய கடன் வட்டியில் அரைவாசி மட்டுமே காசாகச் செலுத்தப்பட்டது.

(iii) 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் கட்டிடத்திற்கு ரூபா 100 000 செலவு செய்து கட்டிட நீடிப்பு செய்யப்பட்டுள்ளது. மேலும் இவ்வருடத்தில் கம்பனிக்குச் சொந்தமான நிலத்தின் ஒரு பகுதி ரூபா 600 000 இற்கு காசுக்கு விற்பனை செய்யப்பட்டது.

(iv) 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் பொறி, இயந்திரங்கள் எதுவும் கொள்வனவு செய்யப்படவோ அன்றேல் விற்பனை செய்யப்படவோ இல்லை.

(v) 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் பங்கு வழங்கல், பங்கிலாபக் கொடுப்பனவுகள் எதுவும் இடம்பெறவில்லை.

**வேண்டப்படுவது :**

31.03.2012 இல் முடிவடைந்த வருடத்திற்கான காசுப் பாய்ச்சல் கூற்றினை அதனுடன் தொடர்புடைய இலங்கை கணக்கீட்டு நியமத்திற்கமையத் தயாரிக்குக. **(10 புள்ளிகள்)**

**(மொத்தம் 15 புள்ளிகள்)**

## விடை

05. (அ) (1) விரைவு விகிதம் = 1.5 தடவை (01) (3 : 2 அல்லது 1.5 : 1)

(2) சரக்கிருப்பு புரள்வு விகிதம் = 5.5 தடவைகள் (02)

செய்கை : $\frac{\text{விற்பனைக் கிரயம்}}{\text{சராசரிக் கையிருப்பு}}$

$\frac{2200 \text{ (01)}}{400 \text{ (01)}}$

5.5 தடவைகள்

(3) மொத்தச் சொத்துக்கள் மீதான வருவாய் விகிதம் = 23.75% (02)

செய்கை : $\frac{\text{வரிக்கு பின் தேறியலாபம் + வட்டி}}{\text{மொத்தச் சொத்துக்கள்}}$

$\frac{400 + 75 \text{ (01)}}{2000 \text{ (01)}} \times 100$

23.75%

(4) கடன் உரிமையாண்மை விகிதம் = 0.5 அல்லது 50% (02)

செய்கை : $\frac{\text{கடன் மூலதனம்}}{\text{உரிமையாண்மை மூலதனம்}}$

$\frac{500 \text{ (01)}}{1000 \text{ (01)}}$

(5) வட்டிக் காப்பு விகிதம் = 9 தடவைகள் (03)

செய்கை : $\frac{\text{வரிகழிக்குமுன் இலாபம் + வட்டி}}{\text{வட்டி}}$

$\frac{400 + 200 \text{ (01)} + 75 \text{ (01)}}{75 \text{ (01)}}$

9 தடவைகள்

**(10 புள்ளிகள்)**

(ஆ) வரையறுத்த உவைஸ் பொதுக் கம்பனி
31/03/2012 ல் முடிவடைந்த வருடத்திற்கான
காசுப்பாய்ச்சல் கூற்று (01)

ரூ'000'

| | | |
|---|---|---|
| **செயற்பாட்டு நடவடிக்கை** | | |
| வருமான வரிக்கு முன்னரான இலாபம் | 200 (01) | |
| சீராக்கல்கள் : | | |
| தேய்வு | 65 (02) | |
| கடன்வட்டி | 120 (01) | |
| நிலம் விற்பனை இலாபம் | (250) (02) | |
| தொழிற்படும் மூலதன அசைவுக்கு முன் செயற்பாட்டு லாபம் | 135 | |
| தொழிற்படு மூலதன மாற்றம்: | | |
| சரக்கிருப்பு குறைவு | 25 (01) | |
| கடன்பட்டோர் அதிகரிப்பு | (150) (01) | |
| கடன்கொடுத்தோர் குறைவு | (170) (01) | |
| | (160) | |
| செலுத்திய வருமானவரி | (50) (02) ← செய்கை | |
| செலுத்திய கடன்வட்டி | (60) (01) | |
| செயற்பாட்டு நடவடிக்கை மூலம் உருவான தேறிய காசு (01) | | (270) |
| **முதலீட்டு நடவடிக்கை** | | |
| நிலம் விற்பனை | 600 (01) | |
| கட்டிட நீடிப்பு செலவு | (100) (01) | |
| முதலீட்டு நடவடிக்கை மூலம் உருவான தேறிய காசு | | 500 |
| **நிதி நடவடிக்கை** | | |
| நீண்ட கால கடன் மீளச் செலுத்தியது (01) | (200) (01) | |
| நிதி நடவடிக்கை மூலம் உருவான தேறிய காசு | | (200) |
| காசும் காசுக்கு சமனானவற்றின் தேறிய அதிகரிப்பில் மாற்றம் (01) | | 30 (01) |
| 2011.03.31 ஆம் திகதிக்கு ஆரம்ப காசும் காசுக்கு சமமானவைகள் | | 70 |
| 2012.03.31 இறுதி காசும் காசுக்கு சமமானவைகள் | | 100 |

**(20 புள்ளிகள்)**

செய்கை : ரூ'000

வருமான வரிக் கணக்கு

| | | | |
|---|---|---|---|
| காசு | 50 | மீதி | 80 |
| | | பகிர்வு | 20 |
| மீ/கீ/கொ/செ | 50 | | |
| | 100 | | 100 |

(இரண்டு உருப்படிகளுக்கு ஒரு புள்ளி வீதம் மொத்தம் 02 புள்ளிகள்)

**5 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவுக்காக ஒதுக்கப்பட்ட புள்ளி 15 X 2 = 30 புள்ளிகளாகும்.
5 ஆம் வினாவினை 62% ஆனவர்கள் தேர்ந்தெடுத்துள்ளனர். இவ் வினாவிற்கான மொத்தப்புள்ளிகள் 30 ஆகும்.
இதில் 00 - 7 ஆயிடையில் 26%
08 - 15 ஆயிடையில் 28%
16 - 23 ஆயிடையில் 28%
24 - 30 ஆயிடையில் 18%
ஆனோர் புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.
இவ்வினாவுக்கு 24 அல்லது அதற்கும் கூடுதலான புள்ளிகளை 18% இத்தினர் பெற்றுள்ளதோடு 26% இத்தினர் 07 அல்லது அதற்கும் குறைவான புள்ளிகளையேப் பெற்றுள்ளனர்.




இவ்வினாவில் 6 உப பிரிவுகள் உள்ளதோடு அதில் கூடிய இலகுத்தன்மையைக் கொண்ட உபபிரிவாக (அ) (2) உள்ளதுடன் அதன் இலகுத்தன்மை 69% ஆகும். இலகுத்தன்மை குறைந்த உபபிரிவாக (அ) (3) உள்ளது. இதன் இலகுத்தன்மை 47% ஆகும்.

(அ) (3) உபபகுதிக்கான இலகுதன்மை 47% மாத்திரமே. மொத்த சொத்துக்களின் அடிப்படையில் வருவாய் வீதத்தைக் கணிப்பது தொடர்பில் மாணவர்களுக்கு சிறந்த விளக்கம் இல்லாதிருந்தது. கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளின் மூலம் விகிதங்கள் தொடர்பிலான விளக்கத்தினைப் பெற்றுக் கொடுக்கும் போது விகிதத்தின் உள்ளடக்கம் தொடர்பான விளக்கத்தினையும் பெற்றுக் கொடுத்தல் பொறுத்தமானது.

(ஆ) பகுதிக்கான இலகுதன்மை 51% ஆகும். காசுப் பாய்ச்சல் கூற்றினைத் தயாரிக்கும் போது வருடத்தில் செலுத்திய வருமான வரியினைக் கணித்தல் தொடர்பான அடைவு மட்டம் பலவீனமான நிலையில் காணப்பட்டதுடன், வருடத்திற்கான வட்டிச் செலவினைக் கணிப்பது தொடர்பிலான விளக்கமும் குறைந்த மட்டத்திலேயே காணப்படுகின்றது. வினாவினூடாக வெளிப்படுத்தப்படும் தகவல்களுக்கு ஏற்புடையதாக செயற்பாட்டு நடவடிக்கைகளை முன்வைக்கும் முறை (நேர்/ நேரில்) தொடர்பில் மாணவர்களுக்கு வழி காட்டுதல் வேண்டும்.

## வினா இலக்கம் - 06

6. (அ) கண்டியிலுள்ள பாடசாலை ஒன்றின் வர்த்தகச் சங்கமானது யாழ்ப்பாணத்திற்கு மூன்று நாள் சுற்றுலா ஒன்றினை மேற்கொள்ள ஒழுங்குகளைச் செய்கின்றது. இச்சங்கத்தின் வங்கிக் கணக்கில் ரூபா 20 000 மீதியாக இருப்பதுடன் இத்தொகையை அங்கத்தவர்கள் பேருந்துக்கான வாடகையைச் செலுத்துவதற்குப் பயன்படுத்தத் தீர்மானித்துள்ளனர்.

பின்வரும் மதிப்பீடுகள் கிடைக்கக் கூடியதாக உள்ளன:

| | |
|---|---|
| பேருந்துகளுக்கான வாடகைக் கட்டணங்கள் | - பேருந்து ஒன்றிற்கு ரூபா 45 000 (50 மாணவர்களுக்கு ஒரு பேருந்து) |
| தங்குமிட விடுதிக்கு மூன்று நாட்களுக்கான வாடகை | - தங்குமிட விடுதி ஒன்றிற்கு ரூபா 20 000 (25 மாணவர்களுக்கு ஒரு தங்குமிட விடுதி) |
| சாப்பாட்டுச் செலவுகள் | - மாணவன் ஒருவனுக்கு நாளொன்றுக்கு ரூபா 600 |
| தண்ணீர் போத்தல் செலவுகள் | - மாணவன் ஒருவனுக்கு நாளொன்றுக்கு ரூபா 200 |
| ஏனைய செலவுகள் | - மாணவன் ஒருவனுக்கு ரூபா 600 |

100 மாணவர்கள் இந்தச் சுற்றுலாவில் பங்குபற்றுவர் எனக் கருதுக.

**வேண்டப்படுவது:**

(1) சமப்பாட்டுப்புள்ளி மட்டத்தை100 மாணவர்கள் எண்ணிக்கையில் அடைவதற்கு ஒவ்வொரு மாணவனிடமிருந்தும் அறவிட வேண்டிய பணத்தின் தொகை எவ்வளவு ?

(2) இச் சங்கமானது தம்மிடம் மேலதிக பணம் இருக்குமாயின் தமது சுற்றுலாவின்போது, சமயத் தலங்களுக்கு பணத்தினை அன்பளிப்புச் செய்ய விரும்புகிறது. ஒவ்வொரு மாணவனிடமிருந்தும் ரூபா 5 000 அறவிடப்படுமாயின் நன்கொடையாக கொடுக்கக் கூடிய தொகை எவ்வளவு ?

**(05 புள்ளிகள்)**

(ஆ) சூரியன் நலன்புரிச் சங்கம் இளைஞர்களின் ஆங்கில மொழி அறிவினை அபிவிருத்தி செய்வதற்கான நிகழ்ச்சிகளை நடாத்துவதில் தன்னை ஈடுபடுத்தியுள்ளது. இலாப நோக்கற்ற இச்சங்கத்தின் புத்தகங்களிலிருந்து பின்வருவன பெயர்த்தெடுக்கப்பட்டுள்ளன.

(i) 31.03.2012 இல் சங்கத்திலுள்ள அங்கத்தவர்களின் எண்ணிக்கை 50 ஆக இருப்பதுடன் அங்கத்தவர் ஒருவருக்கான சந்தாக் கட்டணம் வருடமொன்றுக்கு ரூபா 2 000 ஆகும்.

(ii) சங்கத்தின் சொத்துக்களும் பொறுப்புக்களும் :

| | 31.03.2012 இலுள்ளபடி (ரூபா '000) | 31.03.2011 இலுள்ளபடி (ரூபா '000) |
|---|---|---|
| நிலுவையிலுள்ள சந்தாக்கள் | 6 | 10 |
| முற்பணமாகப் பெற்ற சந்தா | 12 | 8 |
| சரக்கிருப்பு - ஆங்கிலமொழிப் புத்தகங்கள் | 60 | 50 |
| தளவாடங்களும் பொருத்துகளும் (கொண்டுசெல் மீதி) | 160 | 180 |
| வங்கியிலுள்ள காசு | ? | 10 |

(iii) 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் பின்வரும் செலவுகள் ஏற்பட்டுள்ளதுடன் அவை காசாகச் செலுத்தப்பட்டுள்ளன:

| | ரூபா '000 |
|---|---|
| ஆங்கில மொழிப் புத்தகங்கள் வாங்கியது | 100 |
| அலுவலக வாடகை | 60 |
| கணக்கு எழுதுநர்களின் சம்பளங்கள் | 60 |
| அலுவலகச் செலவுகள் | 30 |

(iv) 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்தில் சங்கத்தினால் ரூபா 200 000 நன்கொடைகள் பெறப்பட்டது. பெறப்படும் நன்கொடைகள் அவைகள் பெறப்படும் வருடத்தின் வருமானமாக இனங்காணுவது சங்கத்தின் கொள்கையாகும்.

**வேண்டப்படுவது:**

(1) 01.04.2011 இலுள்ளவாறான திரண்ட நிதி

(2) 31.03.2012 இல் வங்கியிலுள்ள காசு

(3) 31.03.2012 இல் முடிவடைந்த வருடத்திற்கான வருமானச் செலவுக் கணக்கு

**(10 புள்ளிகள்)**
**(மொத்தம் 15 புள்ளிகள்)**

**விடை**

(அ) (1) ஒவ்வொரு மாணவரிடமும் அறவிட வேண்டிய பணம் = ரூ. 4500 **(08 புள்ளிகள்)**

செய்கை (ரூ) :

**நிலையான கிரயம் :**

| | | | |
|---|---|---|---|
| பஸ் கட்டணம் (ரூ 45,000 × 2) | = | 90,000 (01) | |
| வங்கிக் கணக்கிலிருந்து செலுத்தியது | = | (20,000) (01) | |
| | | 70,000 | |
| தங்குமிட கட்டணம் (ரூ 20,000 × 4) | = | 80,000 (01) | 150,000 |
| **மாறும் கிரயம் :** | | | |
| உணவு (ரூ 600 × 3 × 100) | = | 180,000 (02) | |
| தண்ணீர் போத்தல் (ரூ 200 × 3 × 100) | = | 60,000 (02) | |
| ஏனைய செலவுகள் (ரூ 600 × 100) | = | 60,000 (01) | 300,000 |
| தேவையான முழு நிதி | = | | 450,000 |

ஒரு மாணவரிடம் அறவிடப்படவேண்டிய கட்டணம் = ரூ $\frac{450,000}{100}$

= ரூ 4500

முற் செய்கை (ரூ):

மாற்று விடை

$100 = \frac{150,000 \ (03)}{(X - 3,000) \ (05)}$

= 4,500

(அ) (2) சமயத்தலங்களுக்கு அன்பளிப்பாகக் கொடுக்கக் கூடிய தொகை = ரூ 50,000

**(02 புள்ளிகள்)**

செய்கை (ரூ)

(ரூ 5000 (01) - ரூ 4500 (01)) × 100

= ரூ 50,000

(ஆ)(1) 2011/04/01 ஆம் திகதிக்கு திரண்ட நிதி ரூ. 242,000

| செய்கை | ரூ 000 |
|---|---|
| சொத்துகள் : | |
| நிலுவை சந்தா | 10 (01) |
| புத்தகங்கள் | 50 (01) |
| தளபாடம் பொருத்துக்கள் | 180 (01) |
| வங்கியில் காசு | 10 (01) |
| பொறுப்புகள் : | |
| முற்பண சந்தா | 8 (01) |
| திரண்ட நிதி | 242 |

**(05 புள்ளிகள்)**

(ஆ) 2) 2012/3/31 இல் வங்கியிலுள்ள காசு = ரூ 68,000/- **(06 புள்ளிகள்)**

செய்கை (ரூ '000) : கொள்ளல் கொடுத்தல் கணக்கு

| | | | |
|---|---|---|---|
| மீதி | 10 | புத்தகம் வாங்கியது | 100 |
| நன்கொடை | 200 (01) | அலுவலக வாடகை | 60 |
| அங்கத்துவ சந்தா * | 108 (03) | கணக்கு எழுதுநர் சம்பளம் | 60 |
| | | அலுவலகச் செலவுகள் | 30 |
| | | மீ/கீ/கொ/செ | 68 |
| | 318 | | 318 |

(ஏனைய 02 விடயங்களுக்கு (01) புள்ளி வீதம் மொத்தமாக 02 புள்ளிகள்)

செய்கை (ரூ '000) : *அங்கத்துவ சந்தா கணக்கு

| | | | |
|---|---|---|---|
| மீதி | 10 | மீதி | 8 |
| வருமானச் செலவுகள் | 100 | காசு | 108 |
| மீ/செ | 12 | மீ/செ | 6 |
| | 122 | | 122 |

(இரண்டு விடயங்களுக்கு 01 புள்ளிவீதம் மொத்தமாக 03 புள்ளிகள்)

(ஆ) 3)

சூரியன் நலன்புரிச் சங்கம்
31/03/2012 இல் முடிவடைந்த வருடத்திற்கான
வருமானச் செலவுக் கணக்கு (ரூ'000)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பயன்படுத்திய ஆங்கில மொழிப் புத்தகம் | 90 | (02) | நன்கொடை | 200 | (01) |
| அலுவலக வாடகை | 60 | } (01) | அங்கத்துவ சந்தா | 100 | (01) |
| கணக்கு எழுதுநர் சம்பளம் | 60 | | | | |
| அலுவலகச் செலவுகள் | 30 | | | | |
| தளபாட தேய்வு | 20 | (02) | | | |
| செலவிலும் கூடிய வருமானம் (பெற்றத் தொகைக்கு 01 புள்ளி) | 40 | (02) | | | |
| | 300 | | | 300 | |

**(09 புள்ளிகள்)**

**6 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவுக்காக ஒதுக்கப்பட்ட புள்ளி 15 X 2 = 30 புள்ளிகளாகும்.
6 ஆம் வினாவினை 63% ஆன பரீட்சார்த்திகள் தேர்ந்தெடுத்துள்ளனர். இவ் வினாவிற்கான மொத்தப்புள்ளிகள் 30 ஆகும்.
இதில் 00 - 7 ஆயிடையில் 23%
08 - 15 ஆயிடையில் 33%
16 - 23 ஆயிடையில் 26%
24 - 30 ஆயிடையில் 18%
ஆனோர் புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.
இவ்வினாவுக்கு 24 அல்லது அதற்கும் குறைவான புள்ளிகளை 18% இத்தினர் பெற்றுள்ளதோடு 23% ஆன பரீட்சார்த்திகள் 07 அல்லது அதற்கும் குறைவான புள்ளிகளையேப் பெற்றுள்ளனர்.




இவ்வினாவில் 5 உப பிரிவுகள் உள்ளதோடு அதில் அதில் அனைத்து பிரிவும் 45% இற்கும் கூடிய இலகுத்தன்மையைக் கொண்டுள்ளது. இலகுத்தன்மைக் குறைந்த உபபிரிவாக (அ) (1) உள்ளதுடன் அதன் இலகுத்தன்மை 48% ஆகும். குறைந்தளவு இலகுத்தன்மையைக் கொண்ட உபபிரிவாக (ஆ) (1) உள்ளது. இதன் இலகுத்தன்மை 72% ஆகும்.

(அ) (1) மற்றும் (அ) (2) உபபகுதிகளின் இலகுதன்மை முறையே 48% உம் 57% உம் ஆகும். செயற்பாட்டு ரீதியான பயிற்சிகளின் போது நிலையான கிரயம், மாறும் கிரயம் என்பவற்றை வேறுபடுத்தி இனம் காணும் திறன் குறைவாக இருந்தது. வர்த்தக சங்கத்தின் வங்கிக் கணக்கு மீதியினை நிலையான கிரயமொன்றாக இனம் கண்டமை பலவீனமான ஒரு விடயமாகும். மாறும் கிரயத்தினைக் கணிக்கும் போது, சுற்றுலாவின் காலம் தொடர்பில் கவனத்தில் கொள்ளல் வேண்டும் என்பது தொடர்பில் விளக்கமின்மையே இதற்கு காரணமாகும். நிலையான, மாறும் கிரயங்களை இனம் காண“பதற்கு மாணவர்களை கூடுதலாக செயற்பாட்டு ரீதியான பயிற்சிகளின் ஈடுபடுத்துதல் வேண்டும்.

(ஆ) (2) மற்றும் (ஆ) (3) உபபகுதிகளின் இலகுதன்மை முறையே 60% உம் 49% உம் ஆகும். வங்கியிலுள்ள காசுத் தொகையினை கணிக்கும் போது, அங்கத்துவ சந்தாத் தொகையினைக் கணிக்கும் போது ஏற்பட்ட பிழை அங்கு பாதிப்பை செலுத்தியிருந்ததுடன், அட்டுறு எண்ணக் கரு தொடர்பான அறிவு குறைவாக இருந்தமையால் வருடத்திற்குரிய செலவுகளைக் கணிக்க முடியாதிருந்ததைக் காணக் கூடியதாகவிருந்தது. அத்துடன் வருடங்களை ஒப்பிடும்போது சரியாக ஆரம்ப இறுதித் தினங்கள் தொடர்பில் கவனம் செலுத்தாமையேக் காணக்கூடியதாயுள்ளது. பயிற்சிகளின் போது சிறப்பாக விளங்கி ஆரம்ப, இறுதி நாட்களை இனம் காண்பதற்கு மாணவர்களை பயிற்றுவித்தல் ேண்டும்.

## வினா இலக்கம் - 07

7. (அ) கம்பனியொன்று தனது செயற்பாடுகளுக்குப் பயன்படுத்துவதற்காக இயந்திரம் 'A' ஐ அல்லது இயந்திரம் 'B' ஐ வாங்க விரும்புகிறது. ஒவ்வொரு இயந்திரத்தையும் ரூபா 400 000 இற்குக் கொள்வனவு செய்ய முடியும். பின்வரும் தகவல்களும் தரப்பட்டுள்ளன:

(i) எதிர்பார்க்கப்பட்ட தேறிய காசு உட்பாய்ச்சல்கள்

| வருடம் | இயந்திரம் A (ரூபா '000) | இயந்திரம் B (ரூபா. '000) |
|---|---|---|
| 1 | 100 | 75 |
| 2 | 150 | 100 |
| 3 | 180 | 205 |
| 4 | 150 | 240 |

(ii) நான்கு வருடத்திற்கான எதிர்பார்க்கப்பட்ட தேறிய காசு உட்பாய்ச்சல்களின் நிகழ்காலப் பெறுமதியின் கூட்டுத்தொகை (10% கழிவு வீதத்தில்).

| | (ரூபா '000) |
|---|---|
| இயந்திரம் A - | 452 |
| இயந்திரம் B - | 468 |

**வேண்டப்படுவது:**

(1) ஒவ்வொரு இயந்திரத்திற்கும் திருப்பிச் செலுத்தும் காலத்தினைக் கணிப்பதுடன் இம்முறையில் எவ்வியந்திரத்தை வாங்குவது மிகவும் விரும்பத்தக்கது என்பதைக் காரணத்துடன் குறிப்பிடுக.

(2) ஒவ்வொரு இயந்திரத்திற்கும் தேறிய நிகழ்காலப் பெறுமதியைக் கணிப்பதுடன் இம்முறையில் எவ்வியந்திரத்தை வாங்குவது மிகவும் விரும்பத்தக்கது என்பதைக் காரணத்துடன் குறிப்பிடுக.

(3) மேலுள்ள (1), (2) ஆகியவற்றுக்கான விடைகள் ஒன்றிலிருந்து ஒன்று வேறுபடுமாயின், எந்த இயந்திரத்தினை கம்பனி தெரிவுசெய்ய வேண்டுமெனக் காரணத்துடன் குறிப்பிடுக.

**(05 புள்ளிகள்)**

(ஆ) வரையறுத்த அருண் பொதுக்கம்பனியின் 01.03.2012 இல் உள்ளவாறான கடன்பட்டோர் பேரேட்டின் மீதிகளின் மொத்தம் பின்வருமாறு இருந்தது.

| கடன்பட்டோர் | 01.03.2012 இலுள்ளவாறு மீதி (ரூபா '000) |
|---|---|
| அசோகன் | 100 |
| சுனில் | 150 |
| சமந்தா | 50 |
| **மொத்தம்** | **300** |

கம்பனியின் மூலப்பதிவேடுகளிலிருந்து 2012 மார்ச் மாதத்திற்கான கடன் விற்பனைகளும் அவை தொடர்பான கொடுக்கல் வாங்கல்களின் விபரங்களும் கீழே தரப்பட்டுள்ளன. எல்லாப் பெறுமதிகளும் ரூபா '000 இல் தரப்பட்டுள்ளது.

(ரூபா '000 களில்)

| கடன்பட்டோர் | விற்பனைகள் | விற்பனைத் திரும்பல்கள் | பெற்ற காசு | அனுமதித்த கழிவு | பதிவழித்த அறவிடமுடியாகடன் |
|---|---|---|---|---|---|
| அசோகன் | 125 | 25 | 100 | - | - |
| குமரன் | 120 | 20 | - | - | - |
| சுனில் | 90 | - | 50 | - | - |
| கமலா | 265 | - | 135 | 20 | - |
| சமந்தா | - | - | - | - | 50 |
| **மொத்தம்** | **600** | **45** | **285** | **20** | **50** |

01.03.2012 இல் உள்ளவாறான கடன்பட்டோர் பேரேட்டு மீதிகளின் மொத்தமானது கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு மீதியுடன் இணங்கியது. எனினும் இவ்விரண்டு மீதிகளும் 31.03.2012 இல் இணங்கவில்லை. இதனைத் தொடர்ந்து பரிசீலித்தபோது கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு சரியாகத் தயாரிக்கப்பட்டிருந்தது. எனினும் கடன்பட்டோர் பேரேட்டில் கொடுக்கல் வாங்கல்களைப் பதியும்போது பின்வரும் பிழைகள் மேற்கொள்ளப்பட்டிருந்தன.

(i) அசோகன் என்பவரால் திருப்பியனுப்பப்பட்ட சரக்குகள் பதியப்பட்டிருக்கவில்லை.

(ii) சுனிலுக்கான விற்பனைகள் விற்ற பொருட்களின் பட்டியல் விலையில் பதியப்பட்டிருந்தது. (இச்சரக்குகளின் பட்டியல் விலை ரூபா 100 000 ஆகும்).

(iii) அறவிடமுடியாக்கடனாகப் பதிவழிக்கப்பட்ட சமந்தாவின் ஆரம்ப மீதி பதியப்பட்டிருக்கவில்லை.

மாத இறுதியிலுள்ள கடன்பட்டோர் மீதியில் ஐயக்கடனுக்காக 10% இனை ஏற்பாடாகச் செய்வது கம்பனியின் கொள்கையாகும். பதிவழிக்கப்படும் அறவிடமுடியாக் கடன்கள், ஐயக்கடன் ஏற்பாட்டுக் கணக்கினூடாகப் பதியப்படுகிறது.

**வேண்டப்படுவது:**

(1) 2012 மார்ச் மாதத்திற்கான கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு மற்றும் ஐயக்கடனுக்கான ஏற்பாட்டுக் கணக்கு

(2) மேலுள்ள பிழைகளைத் திருத்துவதற்கு முன்னரான 31.03.2012 இல் உள்ளவாறான கடன்பட்டோர் பேரேட்டு மீதிகளின் மொத்தம்

(10 புள்ளிகள்)

(மொத்தம் 15 புள்ளிகள்)

**விடை**

(அ) (1) A = 2 வருடங்கள் 10 மாதங்கள் (01)
B = 3 வருடங்கள் 01 மாதம் (01)

இயந்திரம் A சிறந்தது (01)
காரணம் : திரும்பப் பெறும் காலம் குறைவாக இருத்தல் (01)

(2) A = 452 - 400 = 52 (01)
B = 468 - 400 = 68 (01)

இயந்திரம் B சிறந்தது (01)
காரணம் : NPV நேர்க்கணியப் பெறுமதியில் உயர்வாக இருத்தல் (01)

(3) இயந்திரம் B யினை தெரிவு செய்தல் சிறந்தது.
பணத்தின் காலப்பெறுமதி கருத்திக் கொள்ளப்படுதல்.
செயற்றிட்டத்தின் இறுதி வரையிலான காசுப்பாய்ச்சல் கவனத்தில் கொள்ளப்படுதல். **(02)**

மாற்றுவிடை
இயந்திரம் A யினை தெரிவு செய்தல் சிறந்தது
முதலீட்டுத் தொகையினை விரைவாக திரும்பப் பெற முடிதல்.
முதலீட்டிற்கான அபாயம் குறைவாக இருத்தல். **(10 புள்ளிகள்)**

(ஆ)(1)

கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு (ரூ ’000)

| | | | |
|---|---|---|---|
| மீதி | 300 (01) | விற்பனைத் திரும்பல் | 45 (01) |
| விற்பனை | 600 (01) | காசு | 285 (01) |
| | | அனுமதித்த கழிவு | 20 (01) |
| | | அறவிடமுடியாக்கடன் | 50 (01) |
| | | மீ/கீ/கொ/செ | 500 (01) |
| | 900 | | 900 |
| மீ/கீ/கொ/வ | 500 | | |

ஐயக்கடன் ஏற்பாடு கணக்கு

| | | | |
|---|---|---|---|
| கடன்பட்டோர் | 50 (01) | மீதி | 30 (01) |
| மீ/கீ/கொ/செ | 50 (01) | அறவிடமுடியா ஐயக்கடன் | 70 **(02)** |
| | 100 | | 100 |
| | | மீ/கீ/கொ/வ | 50 |

**(12 புள்ளிகள்)**

(2) கடன்பட்டோர் பேரேட்டு மீதியின் கூட்டுத்தொகை (வழுக்களைத் திருத்த முன்)

(ரூ 000)585 **(08 புள்ளிகள்)**

| செய்கை : | ரூ '000 | |
|---|---|---|
| 31.03.2012 இல் கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கு மீதி (02) | 500 | |
| கூட்டியது | | |
| பதியப்படாத விற்பனைத் திரும்பல் | 25 | (02) |
| கூட்டிப் பதிந்த விற்பனை | 10 | (02) |
| பதியப்படாத சமந்தாவின் ஆரம்ப மீதி | 50 | (02) |
| 31.03.2012 இல் கடன்பட்டோர் பேரேட்டு பட்டியல் மீதி | 585 | |

மாற்று முறை

| செய்கை : | ரூ '000 | |
|---|---|---|
| அசோகன் | 125 | (02) |
| சுனில் | 200 | (02) |
| கமலா | 110 | (01) |
| சமந்தா | 50 | (02) |
| குமரன் | 100 | (01) |
| 31.03.2012 இல் உள்ளவாறான கடன்பட்டோர் பேரேட்டு பட்டியல் மீதி | 585 | |

**7 வது வினாவுக்கு விடையளித்தல் தொடர்பான அவதானிப்புக்களும் முடிவுகளும் ஆலோசனைகளும் :**




வினாவுக்காக ஒதுக்கப்பட்ட புள்ளி 15 X 2 = 30 புள்ளிகளாகும்.
7 ஆம் வினாவினை 75% ஆன பரீட்சார்த்திகள் தேர்ந்தெடுத்துள்ளனர். இவ் வினாவிற்கான மொத்தப்புள்ளிகள் 30 ஆகும்.

இதில் 00 - 7 ஆயிடையில் 23%
08 - 15 ஆயிடையில் 30%
16 - 23 ஆயிடையில் 22%
24 - 30 ஆயிடையில் 25%
ஆனோர் புள்ளிகளைப் பெற்றுள்ளனர்.

இவ்வினாவுக்கு 24 அல்லது அதற்கும் கூடுதலான புள்ளிகளை 25% இத்தினர் பெற்றுள்ளதோடு 23% ஆன பரீட்சார்த்திகள் 07 அல்லது அதற்கும் குறைவான புள்ளிகளையேப் பெற்றுள்ளனர்.




இவ்வினாவில் 5 உப பிரிவுகள் உள்ளன. அவ் அனைத்து உபபிரிவுகளினதும் இலகுத்தன்மை 55% இத்திற்கும் கூடுதலாகும். இலகுத்தன்மை கூடிய உபபிரிவாக (அ) (1) உள்ளதுடன் அதன் இலகுத்தன்மை 64% ஆகும். உபபிரிவுகளான (அ) (2), (ஆ) (2) ஆகிய இரண்டினதும் இலகுத்தன்மை 56% ஆகும்.

(அ) (2) உபபகுதிக்கான இலகுதன்மை 56% ஆகும். தேறிய நிகழ்காலப் பெறுமதியினைக் கணிப்பதற்கு தேவையான காசு உட்பாய்ச்சல், காசு வெளிப்பாய்ச்சல் என்பவற்றின் நிகழ்காலப் பெறுமதி தொடர்பான விளக்கம் மாணவர்களிடம் குறைவாக உள்ளது. கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகளினூடாக வழங்கப்படும் தகவல்களின் தன்மைக்கேற்ப பயிற்சிகளில் தீர்வு காண்பதற்கு மாணவர்களை பயிற்றுவித்தல் வேண்டும்.

(ஆ) (1), (ஆ) (2) உபபகுதிகளின் இலகுதன்மை முறையே 62% உம் 56% உம் ஆகும். ஐயக்கடன் ஏற்பாட்டுக் கணக்கினுடாக அறவிட முடியா, ஐயக்கடன்களை பதிவு செய்வது தொடர்பில் காணப்பட்ட விளக்கம் போதுமானதாக இல்லையென்பதுடன், வழங்கப்பட்ட தகவல்களினூடாக கடன்பட்டோர் கட்டுப்பாட்டுக் கணக்கைத் தயாரிப்பதற்கான விளக்கம் மாணவர்களிடம் காணப்பட்டாலும், கட்டுப்பாட்டுக் கணக்கினூடாகப் பெற்ற மீதியினை அடிப்படையாகக் கொண்டு கடன் பட்டோர் பேரேட்டுக் கணக்கு மீதிகளின் கூட்டுத் தொகையினை கண்டுபிடிப்பதற்கான விளக்கம் அவர்களிடம் பலவீனமாகவே இருந்தது. ஐயக்கடன் ஏற்பாட்டுக் கணக்கினூடாக அறவிட முடியாக் கடன் தொடர்பான சீராக்கங்களை பதிவு செய்வது தொடர்பிலான விளக்கத்தினை மாணவர்கள் பெறும் வகையில் கற்றல் - கற்பித்தலை ஒழுங்குபடுத்துதல் வேண்டும். கட்டுப்பாட்டுக் கணக்கின் மீதி, பட்டியல் மீதி, மீதிகளை ஒப்பிடல், அவற்றின் முக்கியத்துவம் என்வவைத் தொடர்பில் விளக்கமொன்றினை மாணவர்கள் பெற்றுக் கொள்ளும் வகையிலும் கற்றல் - கற்பித்தல் செயலொழுங்கு ஒழுங்கு படுத்தப்படல் வேண்டும்.

2.2.3 **வினாப்பத்திரம் II இற்கு விடையளித்தல் தொடர்பான முழு அவதானிப்புகள், முடிவுகள் மற்றும் ஆலோசனைகள் :**




II ஆம் வினாப்பத்திரத்தில் 4ஆம் வினா தவிர ஏனைய வினாக்களின் இலகுத்தன்மைகள் 50% அல்லது அதற்கும் அதிகமாகும்.

II ஆம் வினாப்பத்திர வினாக்களுள் 76% இனை விடக் கூடிய இலகுத்தன்மையை 3ஆம் வினா கொண்டிருப்பதுடன், 49% இனை விடக் குறைவான இலகுத்தன்மையை 4ஆம் வினா கொண்டுள்ளது.

முதலாம், இரண்டாம் வினாக்கள் கட்டாய வினாக்களாகும். இவ் இரண்டு வினாக்களிலும் அதிகமான இலகுத்தன்மையினை காட்டியுள்ளது இரண்டாம் வினாவிற்கேயாகும். அதன் இலகுத்தன்மை 60% ஆகும்.

மூன்றாம் வினா தொடக்கம் ஏழாம் வினா வரை தெரிவு வினாக்களாவதோடு அவற்றுள் அதிகமான இலகுத்தன்மையினை 3ஆம் வினாவிற்கே காட்டியுள்ளனர். (பக்கம் 6 இல் காட்டப்பட்டுள்ள வரைபின் அடிப்படையில்) அதன் இலகுத்தன்மை 76% ஆகும். வினாக்களைத் தெரிவு செய்யும்போது அதிகமானோர் தெரிவு செய்துள்ளது 3ஆம் வினாவையேயாகும். II ஆம் வினாப்பத்திரத்தின் தெரிவு வினாக்களுள் 4ஆம் வினாவிற்கே குறைவான இலகுத்தன்மையினை காட்டியுள்ளதோடு அதன் இலகுத்தன்மை 49% ஆகும். தெரிவு வினாக்களுள் இரண்டாவதாக அதிகமானோர் தெரிவு செய்துள்ளது 4ஆம் வினாவையேயாகும்.

5, 6, 7 ஆகிய வினாக்களுள் அதிகமான இலகுத்தன்மையினை 7ஆம் வினாவிற்கே காட்டியுள்ளதோடு, அதன் இலகுத்தன்மை 60% ஆகும். 5, 6 வினாக்கள் முறையே 52%, 55% இலகுத்தன்மைகளைக் கொண்டுள்ளது. 5, 6, 7 ஆகிய வினாக்களுள் அதிகமானோர் தெரிவுசெய்திருந்தது 7ஆம் வினாவையேயாகும்.

## பகுதி III

### 3.0 விடையளிக்கும் போது கவனத்தில் கொள்ள வேண்டிய விடயங்களும், முன் மொழிவுகளும் :

### 3.1. விடையளிக்கும் போது கவனத்தில் கொள்ள வேண்டிய விடயங்கள் :

**பொதுவான அறிவுருத்தல்கள்**

* வினாப்பத்திரத்திலுள்ள பிரதான அறிவுறுத்தல்களை வாசித்து விளங்கிக்கொள்ள வேண்டும். அதாவது ஒவ்வொரு பகுதியிலுமிருந்து எத்தனை வினாக்களுக்கு விடையளிக்கப்பட வேண்டும், எந்த வினா கட்டாயமானது, எவ்வளவு காலம் வழங்கப்பட்டுள்ளது, எவ்வளவு புள்ளிகள் கிடைக்கப்பெறும் என்பன தொடர்பாகக் கவனத்திற் கொள்ளப்பட வேண்டும். வினாக்களை நன்கு வாசித்து சரியாக விளங்கி வினாக்கள் தெரிவு செய்யப்பட வேண்டும்.

* பத்திரம் I இற்கு விடையளிக்கும்போது மிகச் சரியான விடையை மட்டுமே தெரிவுசெய்ய வேண்டும்.

* பத்திரம் II இற்கு விடையளிக்கும்போது எல்லா பிரதான வினாக்களையும் புதிய தாளில் எழுதத் தொடங்க வேண்டும்.

* விடைகள் தெளிவான கையெழுத்தில் எழுதப்படல் வேண்டும்.

* பரீட்சார்த்திகள் விடைத்தாளின் எல்லாப் பக்கங்களிலும் உரிய இடங்களில் தமது சுட்டெண்ணை எழுதுதல் வேண்டும்.

* வினா இலக்கம், உபபிரிவுகளின் இலக்கங்கள் சரியாக எழுதப்பட வேண்டும்.

* சரியான சுருக்க விடையளிக்கத் தேவையான சந்தர்ப்பத்தில் விரிவாக விடையளிப்பதை தவிர்ப்பதோடு, விரிவாக விடையளிக்கத் தேவையான சந்தர்ப்பத்தில் சுருக்கமாக விடையளித்தலையும் தவிர்த்தல் வேண்டும்.

* வினாவில் கேட்கப்பட்டுள்ளவாறு விடைகள் தர்க்கரீதியாகவும், பகுப்பாய்வு முறையிலும் சமர்ப்பிக்கப்படல் வேண்டும்.

* II ஆம் வினாப்பத்திரத்திற்கு விடையெழுதும்போது பிரதான வினாவின் உபபிரிவுகள் அனைத்தையும் நன்கு வாசித்து ஒவ்வொரு உபபிரிவுக்குமான எதிர்பார்க்கப்பட்ட விடையினை மாத்திரம் எழுதுதல் வேண்டும்.

* வினாக்களுக்கு விடையளிக்கும்போது வழங்கப்பட்டுள்ள நேரத்தினை சரியான முறையில் முகாமைத்துவம் செய்துகொள்ள வேண்டும்.

* விடையெழுதும்போது சிவப்பு, பச்சை நிற மை பேனாக்களை பாவித்தலைத் தவிர்க்கவும்.

* விடைக்குரிய புள்ளிகளின் அளவு, காலம் என்பவற்றுக்கிடையில் காணப்படும் தொடர்புகளுக்கேற்ப நேர முகாமைத்துவத்தை பின்பற்றுதல் வேண்டும்.

**விசேட அறிவுருத்தல்கள் :**

1. வினாவுக்கான விடைகள் படிப்படியாக முன்வைக்கப்படல் வேண்டும்.
2. விடையளிக்கும் போது ஆயிரங்களில் முன்வைப்பதாயின் சகல தொகைகளும் ஆயிரங்களில் என்பதைக் குறிப்பிட வேண்டும். அதாவது 'ரூபா 000' என
3. ஒவ்வொரு வினாவுக்குமான முற்செய்கைகள் அந்தந்த வினாக்களுடன் முன்வைக்கப்படல் வேண்டும்.
4. வினாவின் உபபகுதிகள் காணப்படுமாயின், விடைக்குரிய உபபகுதி இலக்கத்தினை சரியாக குறிப்பிட்டு முன்வைத்தல் வேண்டும்.
5. வினாவின் உபபகுதிகள் காணப்படடமாயின், அதன் விடைகளை எல்லா இடங்களிலும் பரவலாக எழுதக் கூடாது.
6. இலக்கங்களைத் தெளிவாக எழுதுதல் வேண்டும்.
7. பெற்ற விடையினைப் பயன்படுத்தி முழுமையான விடையினை வழங்குதல்.

## 3.2. கற்றல் - கற்பித்தல் செயலொழுங்கு தொடர்பிலான கருத்துக்களும் முன்மொழிகளும் :

* பாடத்திட்டம், ஆசிரியர் அறிவுரைப்பு வழிகாட்டி, 1995 ஆம் 15 ஆம் இலக்கம் கொண்ட கணக்கீட்டு, கணக்காய்வு நியமச் சட்டம், 2007 ஆம் 07 ஆம் இலக்கம் கம்பனிச் சட்டம், உயர் தரத்திற்கு விதந்துரைக்கப்பட்ட கணக்கீட்டு நியமங்கள் தொடர்பில் கல்வி வெளியீட்டுத் திணைக்களம் வெளியிட்டுள்ள,

  (1) கணக்கீட்டு நியமங்களும், கம்பனிக் கணக்குகளும்

  (2) கிரய, முகாமைத்துவக் கணக்கீடு.

  என்பவை தொடர்பில் ஆசிரியர்களைப் போன்றே மாணவர்களும் அறிந்து கொள்வதுடன், அவற்றைப் பயன்படுத்துதலும் வேண்டும்.

* கணக்கீட்டு வினாப்பத்திரத்திற்கு விடையளிக்கும் போது ஏற்படும் பிரச்சினைகளை வெற்றிகரமாகத் தீர்ப்பதாயின் வகுப்பறைக் கற்றல் - கற்பித்தல் கருமங்களின் போது வணிக உலகில் நடைமுறை ரீதியிலான பிரச்சினைகளை அடிப்படையாகக் கொண்டு பயிற்சிகளை தயாரித்து வழங்கள் மிக முக்கியமாகும்.

* வாசித்தல், எழுதுதல் என்பவற்றில் காணப்படும் குறைபாடு காரணமாக வினாக்களை விளங்கிக் கொள்வதிலும் வெளிப்படுத்தும் திறனிலும் காணப்படும் பிரச்சினைகளை இழிவு படுத்திக் கொள்வதற்கான வேலைத்திட்டங்களை நடைமுறைப்படுத்துதல் வேண்டும்.

* நடைமுறை வணிக உலகில் பயன்படுத்தப்படுகின்ற முதன்மை ஆவணங்கள், கணக்கீட்டறிக்கைகள் என்பவற்றை வகுப்பறைக் கற்பித்தல் துணைச் சாதனங்களாக பயன்படுத்தி பாடத்தினை விருத்தி செய்வதற்குத் தேவையான அனுபவங்களை உறுதி செய்வதற்கு வழிகாட்டுதல் அவசியம்.

  உதாரணம் - மூல ஆவணங்கள்
  - வங்கிக் கூற்று
  - சம்பளப் பட்டியல்
  - இருப்பு அறிக்கை (இன்வென்றி அறிக்கை)
  - வருடாந்த அறிக்கை

* இப்பாடம் தனக்கு மாத்திரமன்றி சமூகத்திற்கும் சம அளவில் முக்கியத்துவமுடைய பாடமொன்றாகையால் சகல வேளைகளிலும் கற்றல் செயலொழுங்குகளை நல்ல விளக்கத்துடனும், தர்க்க ரீதியாகவும், மனதை ஈர்க்கும் வகையிலும் பாட அலகினை ஏன் கற்றல் வேண்டும் என்பது தொடர்பில் மாணவர்களின் மனதில் பதியும் வகையிலும் கற்றல் - கற்பித்தல் செயற்பாடுகள் விருத்தி செய்யப்படல் வேண்டும்.

* இப்பாடமானது தீர்மானமெடுத்தலுக்கு முக்கியமான பாடமொன்றாக இருப்பதனால் ஒவ்வொரு பாட அலகுகளையும் கற்பிக்கும் போது கற்றல் உபகரணங்களையும், கருவிகளையும் பாவிப்பதனூடாக மகிழ்ச்சியான கற்றற் சூழலொன்றைக் கட்டியெழுப்புவதற்கும், திறன்களை விருத்தி செய்வதற்குமான சந்தர்ப்பத்தை பெற்றுக் கொடுத்தல் பொருத்தமானது.

* நவீன பாட அறிவினை விருத்தி செய்து கொள்வதற்கும், இற்றைப்படுத்துவதற்கும் தொடர்ச்சியாக செயற்படும் ஆசிரியர்கள், திறன்கள் நிறைந்த ஆக்கச்சக்தியுள்ள நபர்கள் என்பதுடன் அவர்கள் மாணவர் சமுதாயத்திற்கு பாரிய பங்களிப்பை வழங்குபவர்களுமாவர்.